ஸ்டார் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்
(ரிஜிஸ்டர்ட்)
16, வித்வான் பொன்னுச்சாமி பிள்ளை தெரு,
வடக்காவணிமூல வீதி, மதுரை.

# பயோ கெமிஸ்ட்ரி

## 7-ம் மாதப் பாடம்



**Star Homoeopathic Institute,**
(Registered.)
MADURAI.

## பயோ கெமிஸ்டிரி (அல்லது 12 தாது உப்புக்களின் வைத்தியமுறை தத்துவமும், விளக்கமும்.)

இவ் வைத்திய முறையைக் கண்டுபிடித்து இதன் உண்மையை உலகத்தாருக்கு வெளியிட்ட மேதையான டாக்டர் W. H. சூஸ்லர் என்பவர் 1821-ம் ஆண்டு அவதரித்து 1898-ம் ஆண்டில் மறைந்தார். ஜெர்மனி தேசத்தில் ஓல்டன் பர்க்கில் பிறந்த இவர் பலவித ஆராய்ச்சியின் பலனாக சுமார் 1873-ம் வருடத்தில் "பயோ-கெமிஸ்ட்ரி" வைத்தியத்தை கீழ்கண்ட தத்துவத்தின் அடிப்படையில் ஸ்தாபித்து, மானிடவர்க்கத்திற்கு உண்டாகும் எல்லா வியாதிகளையும் குணப்படுத்தலாம் என்று நிரூபித்தார்.

"உடல் முழுவதும் உறுதியாயிருப்பதற்கும், சரியாக இயங்குவதற்கும், தாது உப்புக்கள் சரியான அளவில் நம் சரீரத்தில் இருக்கவேண்டும். தாது உப்புக்களின் அளவு அதிகரித்தாலும், குறைந்தாலும் சரீரத்திலுள்ள பற்பல செல்களில் நோய்கள் ஏற்படுகின்றது" என்றும்; "சரீரத்தை ஆரோக்கியமாய் வைத்துக்கொள்வதற்கு இத் தாதுப் பொருள்களின் குறையை ஈடு செய்தும், மிகுதியை சரிப்படுத்தியும் செய்ய வேண்டியது அவசியம்" என்று வரையறுத்துக் கூறியிருக்கின்றார்.

இத் தாது உப்புக்களை உயிர் உப்பு என்றும், ஜீவிய உப்பு என்றும் அழைக்கின்றார்கள்.

"பயோகெமிஸ்ட்ரி" என்றால், ஜீவனம், ஜீவியம், என்ற நம் தாய்மொழிக்கு அர்த்தங்கொண்டுள்ள பயாஸ் என்ற கிரீக் மொழியிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்ட வார்த்தையாகும்.

"கெமிஸ்ட்ரி" என்பதை டாக்டர், வெப்ஸ்டர் என்ற

மேதையின் சொற்களின்படி ரஸாயன முறையில் மாறுதலாகும் வஸ்துக்களின் சேர்க்கையை விவரிக்கும் நூல் என்று நாம் எடுத்துக்கொள்ளலாம். ஆகவே பின் வரும் உதாரணம் மூலம் பயோகெமிஸ்ட்ரி என்றால் ஜீவ ரஸாயனம் என்று கூறலாம்.

அதாவது நாம் உண்ட உணவும், அருந்திய நீரும், சுவாசிக்கும்படியான பிராண வாயுவும் ஒன்றுசேர்ந்து நம் சரீரத்தைக் காத்து ரக்ஷிக்கும்படியான 12 வகையான உப்புக்களை சேகரித்துக்கொண்டும்; நம் உடலிலுள்ள பல விதமான அவயவங்கள் செய்யும் தொழில்களினால் அவ் உப்புக்கள் (செலவாகிக்கொண்டும்) குறைந்துகொண்டும் இருக்கின்றன.

முன் சரீரசாஸ்திரத்தில் கூறியுள்ளபடி நம் உடலானது 12 விதமான அணுக் கூட்டங்களினால் ஆக்கப்பட்டிருக்கின்றது. என்பதை தெரிந்திருக்கலாம். இந்த பன்னிரண்டு விதமான அணுக் கூட்டங்களை 12 விதமான கெபிகள் என்றும் கூறலாம். இக் கெபிகளில் காணப்படும் உயிர் உப்பு or தாது உப்பிலிருந்தே இக் கெபிகள் எந்தவகையை சேர்ந்தது என்று நிர்ணயிக்கலாம். அத்துடன் தாது உப்புக்கள் இக் கெபிகளில் எந்த அளவு விகிதத்தில் சேர்ந்து இருக்கின்றதோ, அந்த அளவைப் பொருத்து குண குணங்களும் மாறுதலடையும். அதாவது நம் சரீரத்தில் இருக்கும் ஷை உப்புக்களை கண்டுபிடிப்பதற்கு உயிரற்ற சரீரத்தை எரித்த சாம்பலைப் பரிசோதித்தால் நன்கு தெரியவரும்.

நம் உடலிலுள்ள தசை, ரத்தம் நரம்புப் பகுதிகளில் சுமார் 70 சதம் நீரும், 5 சதம் தாது உப்புக்களும், 25 சதம் இதரப் பொருள்களாகிய, சர்க்கரை, ஆல்ப்யூமென், கொழுப்புச்சத்துக்களும் அடங்கியிருக்கின்றன.



இவ்விதம் இருந்தபோதிலும், டாக்டர் சூஸ்லர் அவர்களின் அபிப்பிராயப்படி இத் தாது உப்புக்கள் இல்லாவிட்டால் மற்றய பொருள்களால் உடலை ஆரோக்கியமாய் வைத்திருக்க முடியாது. இத் தாது உப்புக்களினால்தான் (Tissue Remedies) ஒவ்வொரு கெபிகளும் அதற்கு வேண்டிய விகிதாசாரத்தின் அளவு பிரகாரம் சத்தைப் பெற்று சரீர அலுவல்கள் சரிவர நடைபெற்று வருகின்றன. உடலும் உறுதியாகி, சரீர அவயவங்களின் அமைப்பும் ஒழுங்காய் இருந்து வருகின்றது.

எக்காரணத்தினாலாவது இத் தாது உப்புக்களில் ஒன்றோ அல்லது பலவோ குறைவுபடுமாகில், அந்த உப்புக்கள் எங்கெந்த அவயவங்களிலும், கெபிகளிலும் இருக்கின்றனவோ, அவ்வவயவங்களும் கெபிகளும் செய்யக்கூடிய வேலைகளுக்குத் தடை ஏற்படுகின்றது. இம்மாதிரி நிலைமையேதான் "வியாதி" என்று அழைக்கப்படும்.

ஆகையால் பயோகெமிஸ்ட்ரி வைத்திய சித்தாந்தத்தின் பிரகாரம் மனிதன் வியாதியை அடைவதற்கு அவன் உடலிலுள்ள உயிர் உப்புக்கள் இருக்க வேண்டிய அளவில் இல்லாமல் குறைந்ததே காரணம் என்று தெரியவருகின்றது. இம்மாதிரி சமயங்களில் அளவில் குறைந்த உப்புக்களை சரீரத்தின் கெபிகள் எந்த அளவில் கிரகித்துக்கொள்ள முடியுமோ அந்த அளவிலே கொடுத்தால், கெபிகள் அந்த உப்புக்களை கிரகித்துக்கொண்டு வியாதி விலகிவிடுகின்றது: சரீரம் இயற்கை நிலைமையை அடைகின்றது.

நமது சரீரத்தில் ஒவ்வொரு வகை உப்புக்களும், எங்கெந்த பாகத்தில் அமைந்திருக்கின்றது என்பதையும், என்னென்ன வேலைகளைச் செய்ய உதவுகின்றது என்பதையும், எந்த உப்பு குறைந்தால், எம்மாதிரியான வியாதிகள் ஏற்படும் என்பதையும் நாம்தெரிந்துகொள்ள வேண்டுமல்லவா?

ஆகையால் இவைகளைப்பற்றி விபரமாகவும், விளக்கமாக வும் இந்த வைத்திய முறையைக் கண்டுபிடித்த டாக்டர் ஷூஸ்லர் என்பவர் எழுதி வைத்திருக்கின்றார். நாம் இவை களை நன்றாகப் படித்து மனதில் வைத்துக்கொண்டு ஒவ் வொரு வியாதிக்கும் எந்த உப்பு தேவையோ, அந்த உப்பை சுலபமாக எடுத்துக் கொடுத்தால் வியாதி குணமாகிவிடும்.

உதாரணமாக, கணைச்சூடு என்ற எலும்புருக்கி நோயில் கஷ்டப்படும் குழந்தைகளுக்கு, அக் குழந்தை களின் எலும்புக் கெபிகளில் சுண்ணாம்பின் பாஸ்பேட் (Phosphate of Lime) என்ற உப்பு குறைந்துள்ளது என்பதை நாம் தெரிந்துகொள்ளலாம். ஏனெனில் அக் குழந்தைகளின் எலும்புக் கெபிகள் அவைகளின் ஆகாரத் திலிருந்து கிடைக்கும் இந்த உப்பைக் கிரகித்துக்கொள்ள முடியாத நிலையில் தற்பொழுது இருக்கின்றன. உடனே நாம் அவ்விதம் குறைந்த உப்பை அக் குழந்தைகளின் எலும்புகளுக்குக் கிடைக்கும்படி செய்துவிட்டால், அவ் வெலும்புக் கெபிகள் புதிய சக்தியைப் பெற்று பிறகு தானே ஆகாரத்திலிருந்து அந்த உப்பைப் பெற்றுக்கொள் கின்றன. இம்மாதிரியே பல கெபிகளும் தங்களுக்கு வேண்டிய உப்புக்களை ஆகாரத்திலிருந்து கிரகித்துக் கொள்ளும்படியான சக்தியை உண்டாக்கி, இக் கெபிகளை இயற்கையாய் வேலை செய்யும்படிச் செய்வதே இவ் வைத்திய முறையின் முக்கிய அம்சமாகும்.

## வீரியப்படுத்தும் முறைகள் :—

நம் சரீரம் பல அணுக்களால் ஆக்கப்பட்டிருப்பதால் நாம் உட்செலுத்தும் டை உப்புக்களையும், நம் சரீரக் கெபி கள் கிரகித்துக்கொள்ளும்படியான அளவில் அணுமயமாக் கப்பட்டிருக்கின்றது. ஆகவே ஹோமியோபதி முறையில்



மருந்துகள் தசாம்சமாக வீரியப்படுத்தப் படுவதேபோல் இவ் வைத்திய முறையிலும் தசாம்சமாகவே உப்புக்கள் வீரியப்படுத்தப்பட்டு, மருந்தாகக் கொடுக்கப்படுகின்றது.

"**வீரியமாக்குவது**" என்றால் மருந்தின் அளவை மிக மிகக் குறைப்பதேயாகும். ஆகவே உயர்ந்த வீரியம் என் றால் உப்பின் அளவு குறைந்துள்ளது என்றும், குறைந்த வீரியம் என்றால் உப்பின் அளவு கூடுதலாய் இருக்கின்றது என்றும் தெரியலாமோம். இந்த உப்புக்கள் பூமியிலும் இருந்து நமக்குக் கிடைக்கின்றன. உப்புக்களை எல்லாம் ரசாயன முறையில் சுத்தம் செய்து பின் ஒரு பங்கு உப்புக்கு 9 பங்கு விதம் பால் சர்க்கரை மாவு (Sugar of Milk) சேர்த்து குழி அம்மியில் வைத்து சுமார் 2 மணி நேரம் வரை யிலும் அரைத்து எடுத்தால் அதுவே 1x என்ற மருந்தாகின் றது. இந்த 1x கலவை மருந்தில் ஒரு பங்கு எடுத்து மறு படியும் 9 பங்கு பால் சர்க்கரை சேர்த்து 2 மணி நேரம் வரை அரைத்து எடுத்த கலவை மருந்து 2x வீரியமுள்ள மருந்தாகின்றது. இம்மாதிரியே 3x, 6x, 12x, 30x, 200x, வரையிலும் வீரியப்படுத்தி மருந்தாக உபயோகின்றார்கள்.

**எந்த வீரியத்தில் உபயோகிப்பது?** பொதுவாக நம் உட லில் காணப்படும் இவ்வுப்புக்களின் அளவு சுமார் 6x வீரிய முள்ள ஔஷதத்தின் அளவை அநேகமாய் ஒத்திருப்பதால், பயோகெமிஸ்ட்ரி மருந்துகளை 6x வீரியத்திலேயே உபயோ கிக்கலாம் என்று கருதப்படுகின்றது. ஆயினும் நம் அனு பவத்தில் திடீரென்று தோன்றி கடுமையாயும் இருக்கும் வியாதிகளுக்கு 6x அல்லது 12x வீரியத்திலும், நீடித்த நாட் பட்ட வியாதிகளுக்கு 30x, 200x, ஆகிய வீரியத்திலும் கொடுக்கலாம் என்பது நாம் கண்ட முடிவு.

**மருந்து கொடுக்கும் விதம்?** I. திடீரென்று தோன்றி, அவ்வாறே மறைந்து, அவ்வப்போது தோன்றும் வியாதி

களுக்கு ஒன்று அல்லது இரண்டு மணிக்கு ஒரு தடவை வீதம் கொடுத்து, வியாதி விலக, விலக, இதன் இடைநேரத்தை அதிகப்படுத்திக்கொள்ளலாம்.

II. வலி, தசைகளில் முறுக்கும் வலி, இசிவு, வலிப்பு, காலரா போன்ற வயிற்றுப்போக்கு, விஷபேதி, இரத்தப் போக்கு. போன்ற அவஸ்தை அதிகமாயுள்ள வியாதிகளிலும், சுரம், காய்ச்சல் கடுமையாக இருக்கும்போதும் 10, 15. நிமிஷங்களுக்கு ஒரு தடவை வீதம் கொடுத்துவரலாம். உபாதை குறையக் குறைய 1 மணி, 1-30 மணி, 2 மணிக்கு ஒரு தடவை வீதம் இவ்விதமாக மருந்தைக் கொடுக்கலாம். நீடித்த வியாதிகளுக்கு அவஸ்தை அதிகமாக இல்லாமலிருந்தால் நாள் ஒன்றுக்கு 3 வேளை ஔஷதம் போதுமானதாகும்.

III. பயோகெமிக் மருந்துகளை திரவ ரூபத்திலும், பவுடராகவும், வில்லைகளாகவும் பெற்றுக்கொள்ளலாம். பெரும்பாலும், இம்மருந்துகளை பவுடராகவும், வில்லைகளாகவும் தான் உபயோகின்றார்கள். சுமார் 18 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு 3 முதல் 5 குன்றுமணி எடை மருந்து ஒரு வேளைக்குக் கொடுக்கலாம். சுமார் 3 வயதிற்கு மேல் 12 வயது வரையிலும் உள்ளவர்களுக்கு 2 குன்றுமணி எடையும், குழந்தைகள், பச்சிளம் குழந்தைகளுக்கு ஒரு குன்றுமணி எடை வீதம் ஒரு வேளை மருந்தாகக் கொடுக்கலாம்.

**உபயோகிக்கும் முறைகள்:**— (1) இந்த மருந்துகளை பெரியவர்களுக்கு கைபடாமல் பாட்டிலிலிருந்து சுத்தமான ஒரு காகிதத்துண்டில் எடுத்து நாக்கில் போடவும். உமிழ் நீருடன் கலந்து விழுங்கச் செய்ய வேண்டும். குழந்தைகளுக்கு கொதித்து ஆறின வெந்நீரில் கலந்து வாயினுட் செலுத்திவிடவும்.



(2) **வெளி உபயோகம்:**— சிரங்கு, கட்டி, புண் போன்ற உபாதைகளுக்கு வெள்ளை வாஸ்லைன் ஒரு பங்கும் தகுந்த மருந்துகள் ஒரு பங்கும் வீதம் சேர்த்துக் கலந்து களிம்பாக்கி மேல் பூச்சாகத்தடவலாம். அல்லது ஒரு அவுன்ஸ் ஆறின வெந்நீரில் 10 அரிசி எடை மருந்தைக் கரைத்து அத்தண்ணீரில், பஞ்சையோ, லிண்ட் என்ற துணியையோ நனைத்து வேண்டிய இடத்தில் போடலாம்.

(3) **மருந்துகளை மாற்றிக் கொடுத்தல், பல மருந்துகளை ஒன்றுகக் கலந்து கொடுத்தல்:**—

வியாதிகளுக்குத் தகுந்த சிகிச்சை செய்யும் காலங்களில், சில வியாதிகளுக்கு இரண்டு மருந்துகள் கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அவ்விரண்டு மருந்துகளையும் மாற்றி, மாற்றிக் கொடுக்கலாம். ஆனல் இரண்டுக்கு மேல்பட்ட மருந்துகள் கொடுக்கவேண்டி வந்தால், அந்த ஔஷதங்களை எல்லாம் ஒன்றுகச் சேர்த்து நன்றுய் அரைத்துக் கொடுக்கலாம். இம்மாதிரி மாற்றி, மாற்றிக் கொடுப்பதை தனித்தனி ஔஷதப் பிரயோகம் என்றும், பல மருந்துகளை ஒன்றுகச் சேர்த்துக் கொடுப்பதைக் கூட்டு ஔஷதப் பிரயோகம் என்றும் சொல்லலாம்.

**பத்திய விபரம்:**—மருந்து உட்கொள்ளும்போது புளி, மிளகாய், மிளகு, கிராம்பு, போன்ற பொருள்களை விலக்குவது நலம். அவ்விதம் முடியாவிட்டால் மிகக் குறைந்த அளவில் அவைகளைச் சேர்த்துக் கொள்ளலாம். காப்பி, டீ, கள், சாராயம், மதுபானம் இவைகளை உட்கொள்ளக் கூடாது.

சுரம் வயிற்றுப்போக்கு போன்ற வியாதிகளுக்குபார்லிக் கஞ்சி, அரிசிக் கஞ்சி, முறித்த பால், (Whey milk) ஜவ்வரிசிக்கஞ்சி, ஆரோரூட் மாவுக் கஞ்சி போன்ற நீர் நிறைந்த

ஆகாரம் தான் கொடுக்கவேண்டும். கஞ்சியுடன் உப்பு, சர்க்கரை போன்ற பொருள்களை மிதமாகச் சேர்த்துக் கொள்ளலாம். சுருக்கமாக மிக எளிதில் ஜீரணிக்கக்கூடியதும், வியாதியை தணிக்கும்படியான ஆகாரங்களை கொடுக்கப்படவேண்டும்.

---

**நம் உடலிலுள்ளதும், பயோகெமிஸ்ட்ரி வைத்திய முறையில் மருந்துகளாக உபயோகப்படுவதுமான 12 தாது உப்புக்களின் வகைகளும், பெயர்களும் பின்வருமாறு.**

| வகைகள். | பெயர்கள். |
|---|---|
| I. Phosphates<br>பாஸ்பேட்ஸ் வகைகள் | (1) கல்கேரியா பாஸ்பாரிகம்<br>Calcarea Phosphoricum<br>or Phosphate of Lime |
| | (2) பெர்ரம் பாஸ்பாரிகம்<br>Ferrum Phosphoricum<br>or Phosphate of Iron |
| | (3) காலி பாஸ்பாரிகம்<br>Kali Phosphoricum<br>or Phosphate of Potassium |
| | (4) மெக்னீஷியா பாஸ்பாரிகம்<br>Magnesia Phosphoricum<br>or Phosphate of Magnesium |
| | (5) நேட்ரம் பாஸ்பாரிகம்<br>Natrum Phosphoricum<br>or Phosphate of Sodium |



| | |
|---|---|
| II. Chlorides<br>கரியுப்பு வகைகள் | (1) காலி மூரியாடிகம்<br>Kali Muriaticum<br>or Ch. of Potash |
| | (2) நேட்ரம் மூரியாடிகம்<br>Natrum Muriaticum<br>or Ch. of Soda |
| III Sulphates<br>கந்தக உப்பு வகைகள் | (1) கல்கேரியா சல்ப்யூரிகம்<br>Calcarea Sulphuricum<br>or Sulphate of Lime |
| | (2) காலி சல்ப்யூரிகம்<br>Kali Sulphuricum<br>or Sulphate of Potash |
| | (3) நேட்ரம் சல்ப்யூரிகம்<br>Natrum Sulphuricum<br>or Sulphate of Soda |
| IV Flourides<br>ப்ளுரைட்ஸ் வகை | (1) கல்கேரியா ப்ளோரிகம்<br>Calcarea Flouricum<br>Flouride of Lime |
| V Pure Silica<br>கண்ணாடி மண் வகை | (1) சைலீஷியா அல்லது சிலிகா<br>(Silicea or Silica) |

நமது உடலில் பல செல்களில் காணப்படும் தாது உப்புக்களின் விபரச் சுருக்கம்:—

(I) எலும்புக் செல்களில் காணப்படும் உப்புக்கள். கல்கேரியா பாஸ் அதிகபாகம், கல்கேரியா ப்ளோர், மாக்னீ

ஷியம் பாஸ் சிறிது பாகம், குருத்தெலும்பில் நேட்ரம்மூர் இருக்கின்றது.

(2) தசைக்கெபிகளில் காணப்படும் உப்புக்கள். மெக்னீஷியாபாஸ். காலிபாஸ், நேட்ரம்மூர், பெர்ரம்பாஸ் இவைகள் கொஞ்சமாகவும் காலீமூர் அதிகமாகவும் இணைக்கும் தசைகளில் சிலிகாவும், வளையும் தசைகளில் கல்கேரியா ப்ளோரும் இருக்கின்றது.

(3) நரம்புக்கெபிகளில் காணப்படும் உப்புக்கள். வெள்ளை நிற நரம்புப் பகுதிகளில் காலீபாசும், சாம்பல் நிற நரம்புப் பகுதிகளில் மெக்னீஷியாபாசும் அதிகமாயிருக்கின்றது, பெர்ரம்பாசும், நேட்ரம்மூர் இவைகள் சுமாராக இருக்கின்றது.

(4) சளிச்சவ்வு என்ற சிலேத்துமப்படலத்தில் காணப்படும் உப்பு நேட்ரம்மூர் மேலும் நிண நீர் சுரப்பிகளிலும், நுரை யீரல், கல்லீரல் பகுதிகளிலும், இரத்தத்திலும் காணப்படுகின்றது.

(5) இரத்தத்திலுள்ள சிகப்பு, வெள்ளை வடிவங்களில் பெர்ரம்பாசும் பிளாஸ்மா என்ற திரவத்தில் நேட்ரம்பாசும் அதிகமாகவும் காணப்படுகின்றது. பொதுவாக சரீரத்தின் சகல பகுதிகளிலும் கல்கேரியாபாசும், நேட்ரம்பாசும் அதிக அளவிலும், மற்றவைகள் எல்லாம் குறைந்த அளவிலும் இருக்கின்றது.

(6) சிலிகா என்ற உப்பு ரோமங்களிலும், சர்மத்திலும், நகங்களிலும், எலும்பின் மேல்பாகங்களிலும் இருக்கின்றன. நரம்புப் பகுதிகளில் மிதந்து செல்லும் பொருளாயிருக்கின்றது.



பன்னிரண்டு தாது உப்புக்களின் (Twelve Tissue Remedies) விசேஷ வேலைகளையும், குணங்களையும், இவைகள் குறைவதினால் ஏற்படும் வியாதிகளையும் பற்றி சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

## 1. கல்கேரியா ப்ளோரிகம். (Calcarea Flouricum)

இந்த உப்பு எலும்புகளின் மேல்பாகத்தில் ஜெலெட்டின் என்ற வழு வழுப்பான பொருளாகவும், பற்களின் எனமல் என்ற பாகத்திலும், தோலிலும், இரத்தக்குழாய், இருதயம், கர்ப்பப்பைப் போன்ற உறுப்புக்களின் நீண்டு-சுருங்கக்கூடிய தசைகளிலும், தசைச் சுவர்களிலும் அதிகமாக இருக்கின்றது. ஆகையால் இவ்வுப்பு குறைந்தால் பல அவயவங்கள் வலுவிழந்து தளர்ச்சியடைகின்றன. ஷெ தசைகள் உறுதியில்லாமல் குழகுழத்தும், துவண்டும் போவதினால் இரத்த ஓட்டத்தில் தேக்கம் ஏற்பட்டு அசுத்த ரத்தக் குழாய்கள் பருத்தல், சுரப்பிகள் பெருத்தல், மூலம், அபானத்தில் வெடிப்பும், ரணமும், பல இடங்களில் இரத்தம் கசிதல், கட்டிகள், கருப்பை இடம் பெயருதல், தலைமயிர் உதிர்தல், வழுக்கை விழுதல், பற்களின் எனமல் தேய்ந்து பல் கூச்சம் ஏற்படுதல், பல் சொத்தை விழுதல், குழந்தைகளுக்கு தாமதமாய் பற்கள் முளைத்தல், தோல் வெடிப்பு, நீர் கட்டிகள், நரம்பு சுருட்டிக் கொள்ளுதல் (Varicose Veins) தலையில் முண்டுகள், டான்சில் என்ற தொண்டைக் கோளங்களும், உள் நாக்கும் வீங்குதல் போன்ற பல நோய்கள் ஏற்படுகின்றன.

**விசேஷ குணங்கள்:—** வெப்ப ஒத்தடங்களாலும், வியாதியுள்ள பாகத்தைத் தேய்த்து கொடுப்பதினாலும் வேதனை குறையும், மழை, ஈரம், பனிக்காலங்களில் அதிகரிக்கும்.

## 2. கல்கேரியா பாஸ்பாரிகம். (Calcarea Phosphoricum)

இந்த உப்பு மானிட தேகத்திற்கு மிக்க பிரதானமானது மனித தேகத்திலுள்ள எலும்புகள் எல்லாவற்றையும் பரி சோதித்துப் பார்த்தால் 100-க்கு 57 பாகம் இந்த கல்கேரியா பாஸ் பாரிகமும், பாக்கி 43 பாகத்தில் ஜிலேடின், அல்பு மென், மாக்னீஷியம், சோடியம் க்ளோரைட்ஸ் போன்ற வஸ்துக்களும் நிறம்பியிருக்கின்றன. ஆகையால் இந்த உப்பு இல்லாத எலும்பே கிடையாது. பொதுவாக இந்த உப்பு சரீர வளர்ச்சிக்கு அதி முக்கியமானது.

தசை, எலும்பு, இரத்த அணுக்களை வளர்க்கும் சக்தியை உடையது. பல வகையான ஜீவ அணுக்களை புதுப் பிக்கும் வல்லமை உடையது. பிளாஸ்மா என்ற இரத்த நீரிலும், இரத்த அணுக்களிலும், உமிழ் நீரிலும், இரைப் பையிலும், சுரக்கும் நீரிலும், எலும்புகளிலும், அனேகமாய் எல்லாவகைத் தசைகளிலும் இவ்வுப்பு இருக்கின்றது. இந்த உப்பு சரியான அளவில் இருந்தால் தான் எலும்புகள் வலு வுடனும், பலத்துடனும் இருக்கும். ஆகவே இந்த உப்பு குறைந்தால் சரீர வளர்ச்சி தடைப்படும். குறிப்பாக குழந்தைகள் வளர்ச்சி குறைந்தும், புஷ்டியில்லாமலும், மெலிந்துபோகும். இதனல் எலும்பு மெலிந்து வளைந்து விடுகின்றது. ரிக்கெட்ஸ் என்ற கணை ரோகங்களும் வந்து விடுகின்றது. சிறு குழந்தைகளுக்கு பல் முளைக்கும் காலத் திலும், பெண்கள் பருவத்தை அடையும் காலங்களிலும். அதிசீக்கிரம் வளர்ச்சி அடைந்தவர்களுக்கு ஏற்படும் வியாதி களிலும், வயதானவர்களுக்குக் காணும் கோளாறுகளிலும் இந்த உப்பு மிக்க பயன் தருகின்றது. கடுமையான வியாதி களுக்குப் பின் ஏற்படும் சரீர பலவீனத்திற்கும், இரத்த சோகை வியாதிக்கும், தாது நஷ்டத்தினல் ஏற்பட்ட சக்தி யின்மைக்கும். கண்டமாலை. T. B. என்ற க்ஷயரோகத்திற்



கும். அல்ப்யூமினேரியா என்ற மூத்திரத்தில் உப்பு அதிகமா யிருக்கும் ரோகங்களுக்கும், பலவீனத்தைப் போக்கி உயிர் ஊட்டும் டானிக் மருந்து.

**மனக்குறி:**— குழந்தைகள் சதா அழுதல், சிடுமூஞ்சித் தனம், கோபம், சிடு சிடுப்பு, பெரியவர்களுக்கு ஞாபகச் சக்தி குறைவு, தனிமையில் இருக்கப் பிரியம், சதா வெறும் யோசனைகளில் காலம் கழித்தல்.

**விசேஷ குணங்கள்:**—குளிர், சீதோஷ்ண ஸ்திதி மாறுங் காலம், ஈரநப்புள்ள காற்றுப்படுதல் இவைகளினல் வியாதி அதிகரிக்கும், கத கதப்பான அறையிலும். அமைதியாயிருந் தாலும் வியர்தி குறையும்.

## 3. கல்கேரியா சல்ப்யூரியம். (Calcarea Sulphuricum)

இவ்வுப்பு இணைக்கும் தசைகளிலும், கல்லீரலிலும், பித்தநீரிலும் காணப்படுகின்றது. இரத்தத்தில் உபயோகிக் கப்பட்டு, கெட்டுப்போன சிவப்பு ஜீவ அணுக்களை வெளி யேற்றி இரத்தத்தை சுத்தி செய்யக்கூடிய தன்மை வாய்ந் தது. உடலில் எந்த பாகத்திலும் கெட்டுப்போய் அழுகிப் போன பதார்த்தங்களையும், கழிவுகளையும், உள்ளிருந்து மற்ற பாகங்களை கெடாமல் பாதுகாத்து அவைகளை வெளி யேற்றி சுத்தமாக்குகின்றது. இந்த உப்பு குறைந்தால், இம் மாதிரி கெட்டுப்போன பதார்த்தங்கள் அப்போதைக் கப் போது வெளியேற்றப்படாமல் அங்கேயே தங்கி, தங்கின இடங்களில் கட்டிகளும், சிலந்திகளும் ஏற்படுகின்றது. சரீரத்தில் எந்த இடத்தில் கட்டிகளோ, கொப்புளங்களோ, சிலந்தியோ, பிளவையோ ஏற்பட்டு அவைகளிலிருந்து சீழ் வந்தாலும், சீழ் பிடிக்கும் தருணத்திலிருந்தாலும் 'கல் கேரியா சல்ப்' கொடுக்கவேண்டும். நெடு நாட்களாய் ஆருமலும், கட்டியாகவும், மஞ்சள் நிறமான சீழ் வந்தா

லும், புரையோடிய புண்களாய் இருந்தாலும் இவ்வுப்பைக் கொடுக்கக் குணம் காணலாம். நகச் சுற்று, விரல் சுற்று, என்ற சிரங்குகளுக்கும் அற்புதமான மருந்து. எந்த ரணமும் மஞ்சள் நிற சீழாக வெளியேற்றினால் இந்த உப்பையும். வெள்ளை நிற சீழ் வெளியேறினால் காலிமூர் என்ற உப்பையும். கட்டிகளை பழுக்கச் செய்து உடைக்க 'சிலிகா' என்ற உப்பையும், உடைந்த பின் புண்களை ஆற்ற 'கல்கேரியா சல்ப்' பையும் கொடுக்கவேண்டும். இந்த உப்பு குறைந்த சரீரங்களில் ஏதேனும் புண்கள், காயங்கள் ஏற்பட்டால் சீக்கிரத்தில் ஆறாமல், சீழ் வந்துகொண்டேயிருக்கும்.

**சுரத்தின் குறிகள்:**—முறைச்சுரம், முதலில் காலில் தான் குளிர் ஆரம்பிக்கும் பிறகு உடல் முழுவதும் குளிர் பரவி சூடு ஏற்படும். சுரம் மாலை நேரங்களில் ஏற்படும்

**பொதுவான குறி:**—உள் உறுப்புகளிலிருந்தோ அல்லது உடலின் மேல் பாகத்திலிருந்தோ வெளியேற்றப்படும் வஸ்து சீழ் போன்றும், சிறிது இரத்தம் கலந்தும் போகுமானால், வியாதி எதுவாயினும் இதைக் கொடுத்தால் நிச்சயமாய் பலன் ஏற்படும்.

**வெளி உபயோகம்:**— இதை வெளி உபயோகமாக களிம்பு தயார் செய்து சிரங்கு, புண், கொப்புளங்களுக்கு சர்மத்தின் மேல் தடவலாம்.

**களிம்பு செய்யும் முறை:**—கல்கேரிய சல்ப் 3x. பவுடர் 50 கிரைன் அல்லது 50 அரிசி எடை எடுத்து $\frac{1}{4}$ oz. வெண்ணெய் அல்லது வாஸ்லைன் கலந்து நன்றாக அரைத்துக் கலந்து கொள்ளவும்.

## 4. பெர்ரம் பாஸ்பாரிகம் (Ferrum Phosphoricum)

பெர்ரம் பாஸ் என்றால் அயச்சத்து அல்லது இரும்புச் சத்து என்று பொருள். நம் தமிழ் நாட்டின் பழமொழியின்



பிரகாரம் "இளைத்தவன் இரும்பைத்தின்" என்று இருக்கின்றபடியால், நம் உடலின் உயிர்க்காதாரமான இரத்தத்தின் சிகப்பு வடிவங்களில் இந்த உப்பு அதிகமாக இருக்கின்றது. சிகப்பு வடிவங்களினுள்ளே இருக்கும் 'ஹெமோகுளோபின்' என்ற வஸ்துக்களில் இந்த இரும்புச் சத்து இருப்பதினால் தான், இரத்தத்திற்கு சிகப்பு நிறம் உண்டாகின்றது. மேலும் சரீரத்தின் எல்லாவித செபிகளிலும், ஆல்பியூமின் என்ற மூலப் பொருள்களிலும் இந்த இரும்புச் சத்து சுமாராக இருக்கின்றது. இந்த இரும்பு உப்புக்கள் நாம் சுவாசிக்கும் காற்றிலிருந்து பிராண வாயுவைக் கிரஹித்து இரத்த ஓட்டத்தின் மூலம் சரீரத்தின் சகல பாகங்களுக்கும் பிராணவாய்வைக் கொண்டுபோய் கொடுக்கின்றது. இரும்புச்சத்து நம் சரீரத்தில் இருக்கவேண்டிய அளவுக்கும் குறைந்து விட்டால், பிராணவாய்வும் சரீரத்தின் மற்ற பாகங்களில் குறைந்து விடுகின்றது. இவ்விதம் குறைந்த பிராணவாய்வைச் சரிபடுத்த இரத்த ஓட்டத்தின் நடை துரிதமாகின்றது. இதனால் இரத்த ஓட்டம் அதிகரித்து உடலில் உஷ்ணமும் உண்டாகி தசைச் சுவர்களும் வலுவிழந்து விடுகின்றன. இம்மாதிரி இரத்த ஓட்டம் நேர்மையாயில்லாத காரணத்தினால், திரேகத்தில் ஒரு சில இடங்களில் தேவைக்கு அதிகமான இரத்தம் கூடுவதும் மற்ற இடங்களில் குறைவதுமாகின்றது

எந்த இடத்தில் இரத்தம் அதிகமாகக் கூடுகின்றதோ அங்கு வலி, சூடு உண்டாகி வீக்கமும், வேக்காடும், அழற்சியும் ஏற்பட்டு சிறிய இரத்தக் குழாய்கள் வெடித்து இரத்தப் பெருக்கு ஏற்படலாம். அல்லது சுரம் கடுமையாய் ஏற்படலாம். உதாரணமாக வயிறு சிறுகுடல் இவைகளின் தசைகள் வலுவிழந்தால் அங்கே ஜீரணக் கோளாறுகளை ஏற்படுத்தி வயிற்றுப்போக்கு, வாந்தி, வயிற்றுக்கடுப்பு போன்ற

வியாதிகள் உண்டாகும். தோல், தசைகளில் ஏற்படிடின் இரத்தக் கட்டிகள் உண்டாகலாம். இந்த உப்புக் குறைவால் ஏற்படும் இரத்தக் குறைவு, சோகை வியாதிகளுக்கும், இரத்த சம்பந்தமான எல்லா வியாதிகளுக்கும் முதன் முதலில் கொடுத்தால் வியாதிகளைத் தடுத்து அதன் கடுமையைக் குறைத்துவிடும்.

**முக்கிய உபயோகம்:—** சுரம், எவ்வித சுரங்களுக்கும் ஆரம்பத்தில் கொடுக்கலாம். பெண்களின் கெர்ப்பப்பையின் இரத்தப் பெருக்குக்கும், அதன் பின் வரும் சுரங்கள், குழந்தைகளுக்கு பற்கள் முளைக்கும் காலத்தில் வரும் சுரங்கள், காது வலியுடன் ஏற்படும் சுரங்கள். தலையில் அதிக ரத்தம்கூடி துடிக்கும் தலைவலி, ஜலதோஷம். தொண்டைப் புண், மலேரியா சுரம், ஈறு வீக்கம், கழுத்து விறைப்பும், சிவந்த வீக்கமும். தொண்டை கறகறப்பு, பேசினால், பாடினால் குறல்கம்முதல், கக்குவான் இருமல் அடிக்கடி வாயாலெடுத்தல் போன்ற நோய்களுக்கு இதை 6x முதல் 12x வரை கொடுக்கலாம்.

**பொதுவான குறிகள்:—** எந்த வியாதியும் (குறிப்பாக வலிகள்) அசைவினால் அதிகரித்தும், குளிர்ந்த ஒற்றடங்களினால் குறைந்தும் இருக்கும், மேலும் இரவிலும் அதிகாலையிலும் வியாதிகள் அதிகமாகும். நாக்கு ரத்தச் சிவப்பாக இருக்கும்.

**கவனிப்பு:—** (1) 12x வீரியம் முதல் 30x வீரியம் வரை இரவில் கொடுக்கவும். 3x, 6x வீரியத்தில் இரவு நேரங்களில் கொடுத்தால் தூக்கம் வராது

(2) எல்லாவிதமான அழற்சிகளுக்கும் முதல் கட்டத்தில் பெர்ரம் பாசும், இரண்டாவது கட்டத்தில் காலிமூரும் கொடுக்கவும்.



## 5 காலி முரியாடிகம் (Kali Muriaticum)

இந்த உப்பு திரேகத்தின் தசைநார் பகுதிகளிலும், இரத்தம், நரம்புப் பகுதியிலும், சர்மத்திலும், சளி ஜவ்வு போன்ற பாகங்களிலும் இருக்கின்றது. எல்லாவிதமான அழற்சிகளின் அல்லது தாபிதங்களின் இரண்டாவது கட்டத்தில் மிக்க உபயோகமாகின்றது. அத்துடன் அழற்சியான பாகங்களிலிருந்து வெளியேற்றப்படும் கழிவுப் பொருள்கள் அதாவது மூக்குச் சளி, ஜலதோஷச்சளி, பெண்களின் வெள்ளை ஒழுக்கு, கட்டிகளில் சீழ்போன்ற வெள்ளை நீர், மேக வெட்டை நீர் போன்ற கழிவுகள் வெண்மையாகவும், கெட்டியாகவும் இருக்கும் சமயங்களிலும் தான் இந்த உப்பு விசேஷமாய் உபயோகமாகின்றது.

**முக்கியக் குறிகள்:—** நாக்கில் மாவு போன்ற வெண்மைமாசு, அல்லது வெண்படலம் படிந்திருப்பது ஓர் விசேஷமான குறியாகும். எல்லா உபாதைகளும் உஷ்ணம், அசைவினால் அதிகமாகும். குளிர்ந்த பானங்கள் அருந்தினால் குறையும். கொழுப்புப் பொருள், பசையுள்ள அதிகச் சத்துள்ள ஆகாரங்களை உட்கொள்வதினால் வயிற்றுக் கோளாறுகள் அதிகப்படும். வெளியாகும் மலம் வெண்மையாகவோ. காய்ந்த களிமண் நிறமாகவோ இருக்கும்.

**உபயோகம்:—** நீடித்த ஜலதோஷம், குழந்தைகளின் தொண்டை இழுப்பு அல்லது குருமாந்தம் (சுவாசக குழாயின் அழற்சியினால் உண்டாகும் ரோகம்) வயிற்றுக் கடுப்பு. இரத்தம் உரைந்து கட்டிப்பட்டு கருப்பு நிறமாவதற்கும், பெண்களின் மாதவிடாய் கோளாறுகளுக்கும் வெள்ளை ஒழுக்கு வியாதிகளுக்கும், டான்சிலிட்டிஸ், டிப்தீரியா அடினாயிட்ஸ் என்ற உள்நாக்கு வீக்கத்திற்கும் (இந்த பாகங்களில் வெண்மை நிறம் படிந்திருக்கும்) நிமோனியா, வாத சுரம், டைபாயிட் சுரம், ப்ளூரசி முறை சுரம் போன்ற

வியாதிகளுக்கும், இருமல் வெள்ளையான கோழை. காதிலிருந்து தொண்டைக்குச் செல்லும் யூஸ்டேகியன் குழாயில் **நீர் அ**டைப்பினால் ஏற்படும் காது கேளாமைக்கும் முக்கிய மருந்தாகின்றது.

**சர்மக் கோளாறுகள்:**— படுக்கையில் தோல் அரிப்பு, கரப்பான், சிரங்குகள், மஞ்சளான அல்லது வெண்மையான சீழ், நீரைக்கக்கும் சிறு கொப்புளங்கள், கட்டிகள், பிளவைகள், முகப்பரு. இவைகளுக்கு சீழ் பிடிப்பதற்கு முன் கொடுக்கவேண்டும். தோலில் மாவு படர்ந்த மாதிரி செதில்கள் தோன்றுவதற்கும் உபயோகமாகும். சுரப்பிகளின் வீக்கத்திற்கு முதன்மையான மருந்து.

**கவனிப்பு:**— எல்லா தொண்டை வியாதிகளுக்கும் 3x வீரியத்தில் அடிக்கடி கொடுக்கவேண்டும் அத்துடன் இந்த மருந்தை வெந்நீரில் கரைத்துக் கொப்பளிக்கவேண்டும்.

## 6. காலி பாஸ்பாரிகம். (Kali Phosphoricum)

இந்த உப்பு இரத்தத்தின் பிளாஸ்மா என்ற நீரிலும், மூளை, நரம்புகளின் வெள்ளை நிறப் பகுதிகளிலும் (White Matter) தசை அணுக்களிலும் இருக்கின்றது. புதுக்கெபிகள், நரம்பு அணுக்கள், தசை அணுக்கள் உற்பத்தியாவதற்கு இந்த உப்பு மிகவும் அவசியமாகின்றது. இந்த உப்பினால் நரம்புகள் நன்முக போஷிக்கப்பட்டு வலுப்படுத்தப்படுகின்றது. மேலும் இரத்தம் கெடாமலும், தசைகள் அழுகிக் கெட்டுப் போகாமலும் இருப்பதற்கு இந்த உப்பு தேவை. இந்த உப்பு குறைந்தால், நரம்புத் தளர்ச்சி, ஞாபகச் சக்தி குறைதல், மனக்குழப்பம், மறதி, பயம், அசதி, ஆயாசம், நரம்பு சம்பந்தமான தலைவலி, பிண நாற்றமுள்ள வயிற்றோட்டம், மயக்கம், கிறுகிறுப்பு போன்ற நோய்கள் ஏற்படும்.



**முக்கியக் குறிகள்:**— நாக்கின் ஓரங்கள் சிவந்து இரணமாயிருத்தல் காலை நேரங்களில் அதிக வறட்சி, சில சமயம் கரும் பழுப்பு நிறத்துடன் இருக்கும் நாக்கு, பல் ஈறுகளில் இரத்தம் கசிதல், மஞ்சள் நிறமுள்ள சீதகம் வெளியாதல், மலம் கருப்பாக இருத்தல், எல்லாவிதமான உபாதைகளும் குளிர் காற்றினால் அதிகமாகும்.

**உபயோகம்:**— டை நோய்களுக்கும், பெண்களின் சுகப்பிரசவத்திற்கும், கெர்ப்பவதிகளுக்கு நோய்வராமல் தடுக்கவும் நீடித்த சுரங்களுக்குப் பின் ஏற்படும் பலவீனத்தைப் போக்கவும், டைபாயிட் போன்ற சுரங்களுக்கும், தீவிர சுரம் இருக்கும்போது ஏற்படும் மயக்கம் களைப்பிற்கும், இம்மாதிரி மயக்கம் ஏற்படும் சகல சுரங்களிலும் இந்த மருந்து உபயோகமாகும்.

## 7. காலி சல்ப்யூரிகம். (Kali Sulphuricum)

இந்த உப்பு சர்மத்திலும், சர்மத்தினடியிலுள்ள தசைகளிலும், பூந்தசைகளிலும் (நம் உடலிலுள்ள முக்கிய பாகங்கள் எல்லாம் பூந்தசைகளினாலேயே ஆக்கப்பட்டிருக்கின்றன) காணப்படுகின்றது. திரேகத்தில் ஏற்படும் அழற்சி (வேக்காடு) களின் மூன்றாவது கட்டத்தில் இது உபயோகப்படும். இதுவும் (பெர்ரம் பாசைப்போல்) பிராணவாயுவை கிரஹித்து. உட்செலுத்துவதுடன், அங்கு ஏற்படும், கழிவுப் பொருள்களையும் வெளியேற்றும் சக்தியை உடையது. எந்த ஒரு வியாதியிலும் பாதிக்கப்பட்ட பாகங்களிலிருந்து வெளியேற்றப்படும் நீர், சளி, கோழை, சீழ்போன்றவைகள் மஞ்சள் நிறமாகவே இருக்கும். எக்காரணத்தினாலாவது இம்மாதிரிப் போக்கு வெளிப்படுவது தடைப்பட்டு இடையே நின்றுவிடுமானால், வியாதியஸ்தருக்கு பலவிதமான கோளாறுகள் ஏற்பட்டுவிடும்.

**முக்கியக் குறிகள்:**—நாக்கு மஞ்சள் மாசுபடிந்தும் ருசியில்லாமலும் வழ வழவென்றும் இருக்கும் (இது விசேஷக் குறி) வெளியேற்றப்படும் கழிவுகள் மஞ்சளாகவே இருக்கும். வலி, நோவு, வேதனை இடம் விட்டு இடம் மாறிக் கொண்டேயிருக்கும். உதாரணமாக, கையில் ஏற்பட்ட வாய்வு வலியானது முதுகுப்பக்கமும், வலதுபக்கம் இருந்து இடது பக்கமும் ஓடிப்பாயும் (பல்ஸடில்லாவைப்போல்)

**பொதுவான குறி:**—உபாதைகள் எல்லாம் மாலை நேரத்திலும், வீட்டினுள் இருக்கும்போதும் அதிகரிக்கும் வீட்டைவிட்டு வெளியே உலாவுவதினால், அல்லது திறந்த காற்றில் இருப்பதினால் குறைவாகும்.

**உபயோகம்:**—சுரம் போன்ற வியாதிகளுக்கு ஆரம்பத்தில் பெர்ரம்பாசுடன் இந்த உப்பையும் மாற்றிக் மாற்றிக் கொடுத்தால், வியர்வையை உண்டாக்கி சுரத்தைக்குறைந்துவிடும்.

**சர்ம நோய்கள்:**— மஞ்சள் பொறுக்குடன் கூடிய கொப்புளங்கள், தலையின் பொடுகுகள், மயிர் உதிர்தல், தோல் வெடிப்பு, கரப்பான், செதில்கள் போன்று கை, கால் விரல்களில் உண்டாகுதல். அக்கி போன்ற மஞ்சளான கொப்புளங்கள், சர்ம நோய்க்குப் பின் ஏற்படும் தோல் உறிதல், நகம் சொத்தை ஆகுதல் (நகம் சம்பந்தமான வியாதிகளில் காலீசல்ப் 12x-ம், சிலிகா 12x-ம் மாற்றி மாற்றிக் கொடுக்கவும்.)

**ஜலதோஷம்:**—ஜலதோஷத்தில் மஞ்சளாகவும், பிசின் போன்று ஒட்டிக்கொள்ளும் தன்மையுடன் பச்சையும் மஞ்சளும் கலந்த சளி வெளியாகும்போது கொடுக்கவும். மூக்கடைப்பு, மூச்சு முட்டல் இவைகளுக்கும், கண்வலி, மஞ்சள் பீளை தள்ளுதல், குண்டி அல்லது ஆசனம் எரிதல் போன்ற சகல வியாதிகளுக்கும் கொடுக்க வேண்டிய மருந்து.

**கவனிப்பு:**—இந்த மருந்தை நீடித்துவரும் சளித் தொந்திரவுகளுக்கும், கண் வியாதிகளுக்கும். காலிமூர், பல்சடில்லா இம்மருந்துகளுடன் மாற்றி மாற்றிக் கொடுக்கலாம். 6x அல்லது 12x வீரியம் வரை உபயோகிக்கலாம். வெளி உபயோகத்திற்கு 3x வீரியம் போதுமானது.



## 8. மெக்னீஷியா பாஸ்பாரிகம். (Magnesia Phosphoricum)

இந்த உப்பு நரம்புப் பகுதிகளின் சாம்பல் நிற (Grey Matter) வஸ்துக்களில் அதிமாயிருக்கின்றது. மேலும் மூளை, முள்ளந்தண்டு, பல் தசைகள், தசை நார்கள் முதலியவைகளிலும் காணப்படுகின்றது. இந்த உப்பு குறைவதால் தசை நார்கள் சுருங்கி, இழுப்பு வலிப்பு. கால்களில் கெண்டையேறுதல் போன்ற நரம்புக் கோளாறுகளும், நரம்புச் சம்பந்தமான வலி, பாரிச வாய்வு, தசைகள் துடித்தல் போன்ற வியாதிகளும் ஏற்படும் தளர்ந்து போன நரம்பு மண்டலத்தை பலப்படுத்த மிக அவசியமான உப்பாகும்.

**முக்கியக் குறிகள்:**— வலிகள் திடீரென்றும். விட்டு விட்டுவரும், தசைகளைக் கவ்விக்கவ்வி இழுக்கும் வலிகள், அங்கும் இங்கும் ஓடும் தன்மையுடனிருக்கும். வலி முதலானவைகள் அமுக்குவதினாலும், சூடான பானங்களினாலும். சூடான ஒத்தடங்களினாலும் சமனமடையும், குளிர்ச்சியினால் உபாதிகள் அதிகமாகும்.

**உபயோகம்:**- (1) முகவாதம் என்ற முகத்தசைகள் அடிக்கடித் துடித்தல், திக்குவாய். கண் இமைகள் விட்டு விட்டுத் துடித்தல், நரம்புச் சம்பந்தமான தலைவலி, நெஞ்சில் எரிச்சல், பல்வலி, வலது கண் வலி, வயிற்றுப் பொரு

மல். (சூடான பானம் குடித்தால் சமனம்) முக்கியமாய் வயிற்று வலி, நரம்பு சம்பந்தமான இருதய படபடப்புடன் ஏற்படும் இருதய வலிகள், கால்களின் ஆடு தசைகளில் வலிகள், குளிர்காற்று, குளிர்ந்த தண்ணீர்பட்ட காரணத்தினால்வரும் காதுவலி, விழுங்கும்போது ஏற்படும் தொண்டை வலி போன்ற நோய்களுக்கு இந்த மருந்தை வெந்நீருடன் கலந்து கொடுக்கவேண்டும்.

(2) அடிக்கடி வரும் இருமலுக்கும், கக்குவான் இருமலுக்கும், இரவில் படுத்த உடனே ஏற்படும் இருமலுக்கும், விசேஷமாக விக்கலுக்கும் சிறந்த மருந்து. (குழந்தைகளுக்கு பல் முளைக்கும் காலத்தில் ஏற்படும் இசிவு, இழுப்பு, வலிப்புகள் சுரம் மட்டிலும் இல்லாமல் இருந்தால் கண்டிப்பாய் இதைக் கொடுக்கலாம்).

(3) பெண்களின் மாதவிடாய் விட்டு விட்டும், சதைத் துண்டுகளாகவும் வலியுடனும், (வெளியாவதற்கு முன் கடுமையான வலி) அடிக்கடியும், போக்கு கறுப்பாகவும் இருந்தால் மெக்னீஷியா பாஸ் 6x, 30x வரை கொடுக்கலாம் இம்மாதிரி சமயங்களில் சுரம் ஏற்பட்டால், பெர்ரம் பாஸ் 30x வீரியத்தில் கொடுக்கவேண்டும்.

**கவனிப்பு**:—சகலவலிகளும் வலதுபக்கம் அதிகமாகும். இந்த மருந்தை விக்கல் வியாதிக்கு தேனுடன் சுடு தண்ணீர் கலந்து கொடுத்தால் நன்றாக வேலை செய்யும்.

## 9. நேட்ரம் மூரியாடிகம். (Natrum Muriaticum)

இந்த உப்பு நாம் சமையலுக்கு உபயோகப்படுத்தும் உப்பே. இது சகல அவயவங்களிலும் இருக்கின்றது, குறிப்பாக நிண நீர்ச்சுரப்பிகளிலும், கல்லீரல், மண்ணீரல், இரத்தம், வயிற்றின் பூந்தசை இவைகளில் சற்று அதிகமாக இருக்கின்றது. இது சரீரத்தில் உற்பத்தியாகும் நீர்ப்



பொருள்களை பல பாகங்களுக்கும் சரிவர பிரித்துக் கொடுத்தும், ஈரக்கசிவை ஒவ்வொரு அவயவங்களிலும் சரியான விகிதாசாரப்படி இருக்கும்படி பாதுகாத்துக்கொள்கின்றது. இந்த உப்புக் குறைந்தால் சரீரத்தில் ஏதாவது ஒரு பாகத்தில் அதிகமான நீர் உற்பத்தியும், மற்றோர் பாகத்தில் வறட்சியும் காணப்படும்.

**முக்கியக் குறிகள்**:— அதாவது அதிகமான வியர்வை சரீரத்தின் எப்பாகத்திலாவது ஏற்படுதல், அதிகமாக உமிழ் நீர் உற்பத்தியாகுதல், ஜலதோஷத்தில் மூக்கிலிருந்து நீர் தாரை தாரையாக (கண்ணாடி போன்ற நிறத்தில்) ஒழுகுதல், வயிற்றிலிருந்து தண்ணீரும், கோழையுமாக வாந்தி எடுத்தல், கண்களிலிருந்து மழ மழவென்று கண்ணீர் வடிதல், போன்ற குறிகளுடன்வரும் தலைவலி, வயிற்றுவலி, பல்வலி, முகத்தில் வலி, ஆகிய நோய்கள் முக்கியமாகும்.

**மற்ற வியாதிகள்**:—அகோரப்பசி எவ்வளவு உணவு உட்கொண்டபோதிலும் சரீர இளைப்பு, வாசனை அற்றும், ருசியற்றும், உப்புக் கரிப்புடன் இருக்கும் அஜீர்ணம், வயிற்றில் எரிச்சலுடன் துடிப்பும் ஏற்படுதல், அத்துடன் இரத்தம் முறிந்து தண்ணீர் போன்று போகும் மாதவிடாய் கோளாறுகளுக்கும், இரத்தச் சோகைக்கும், மலச் சிக்கல், சிறு நீர் அடிக்கடி வெளியாவதற்கும், தண்ணீர் போன்ற மேக வெட்டை, பெண்களின் வெள்ளை ஒழுக்கு வியாதிக்கும், முக்கியமான மருந்தாகும்.

**மனக் குறிகள்**:-வருங்காலத்தைப் பற்றிய வருத்தம். ஆறுதல் சொன்னால் அதிகமாக அழுவார்கள்.

**சர்ம நோய்**:—கண்ணாடி போன்ற நிறத்தில் நீர் வடியும். கொப்புளங்கள், தண்ணீரைக் கக்கும் படைகள், வெயில் கால வேர்க்குரு போன்ற வியாதிகளுக்கு 'சேபியா' என்ற மருந்துடன் மாற்றி, மாற்றிக்கொடுக்கவும்.

**சூரிய இடி Sun Stroke:**–நெடு நேரம் வெய்யிலில் சுற்றித்திரிந்த காரணத்தினுல், நேட்ரம்மூர் உப்புக் குறைந்தவர்களுக்கு மூளைக்கு அதிகமான நீர் இழுக்கப்பட்டு மூளையில் அதிக பளுவேறி அபாயகரமான தலைவலி ஏற்படுகின்றது. இதற்கு 30x வீரியத்தில் கொடுக்கவும்.

**சுரம்:**– தலைவலியுடன் கூடிய காய்ச்சல், மலேரியா என்ற குளிர் சுரம், காலை 9 மணி முதல் 11 மணிக்குள் ஏற்பட்டு தாகம் அதிகரிக்கும். அசதியை ஏற்படுத்தும் சுரம், கொய்னுவினுல் அதிகரித்த மலேரியா சுரம், சில நீடித்த வியர்த்துவரும் சுரம் இவைகளுக்கு (நாக்கின் குறியைக் கவனிக்கவும்) நாக்கு சுத்தமாகவும், ஓரங்களில் நுரை போன்ற உமிழ் நீர் படிந்தும், நாக்கின் நுனியில் சிறு கொப்புளங்கள், எரிச்சல், தடித்தும், மறத்தும், விரு விருப்பாகவும், வெளுத்தும் இருக்கலாம். சிலருக்கு நாக்கு வறண்டு பாளம் பாளமாக வெடித்தும் வெளுப்பாயும் இருக்கும்,

**காது நோய்:**–சீழ் தண்ணீர் போன்றும், குழ குழப்பாயும் காதுகளிலிருந்து வெளிப்படும், வாயில் ஏதாவது மெல்லும்போது காதுகளில் அறிப்பும், எரிச்சலும்.

**கவனிப்பு:**– (1) அதிக உப்புக் கலந்த ஊறுகாய், தின்பண்டம் சாப்பிட்டதினுல் ஏற்படும் கோளாறுகளைப் போக்க நேட்ரம்மூர் 30x-ம், பாஸ்பரஸ் 30 வீரியங்களில் மாற்றி, மாற்றிக் கொடுக்கவும்.

(2) அதிகமாக வாயில் நுரைதள்ளும் காக்கை வலிப்பு நோய்க்கு நேட்ரம்மூர் 6x-ம், காலீமூர் 6x-ம், மாற்றி மாற்றிக் கொடுக்கவும்.

(3) பூச்சிக்கடிகள். தேள்கடி, விஷகடி. கொசுக்கடி, இவைகளுக்கும் கொடுக்கலாம்.



## 10. நேட்ரம் பாஸ்பாரிகம். (Natrum Phosphoricum)

இந்த உப்பு மாமிசத் தசைகளிலும், இரத்தம், மூளை, நரம்புப் பகுதிகளிலும், முக்கியமான தாது நீர்களிலும் இருக்கின்றது. நம் உடலிலுள்ள நீர்ப் பொருள்களில் லாக்டிக், ஆசிட்டும், (புளிப்பு அல்லது காடி acid) காரத்தன்மையும் இருக்கின்றது. (Alkalin) இவ்வுப்பு லாக்டிக் ஆசிட்டை அதிகப்படாவண்ணம், அப்போதைக்கப்போது சரிப்படுத்தி அதனுல் ஏற்படும் கரிபமில வாயுவை நுரையீரலுக்குக் கொண்டுபோய் வெளியேற்றுகின்றது. இரத்தத்தில் இவ்வுப்பு இருப்பதால் யூரிக் ஆஸிட் (Uric Acid) என்ற வஸ்து கரைக்கப்பட்டு, இரத்தத்தின் உஷ்ணத்தினுல் ஒரேயிடத்தில் தங்கிப்போகாமல் இரத்த ஓட்டத்தில் கலக்கப்படுகின்றது. இவ்வுப்பு குறைந்தால் யூரிக் ஆஸிட் கரையாமல், தேக்கப்பட்டு மூட்டுகளில் தங்கி ரூமாடிஸம் என்ற வாத ரோகம், கீல்வாயு போன்ற வியாதிகள் வரும். இடுப்பில் அசதிமிகுந்தும், கைகால்களில் நடுக்கமும் ஏற்படும், நாம் உண்ணும் கொழுப்புப் பொருள்களை சரியானபடி ஜீரணிக்கச் செய்யவும், சரீரத்திலிருக்கும் லாக்டிக் ஆசிட்டைக் கரைத்தும் உதவக் கூடிய நாட்ரம் பாஸ் நம் உடலில் குறைந்துவிடின் டை புளிப்புக்காடி (லாக்டிக் ஆஸிட்) அதிகமாகி வயிற்றிலுள்ள சீரண ரசங்கள் கெட்டு அழுகி, புளிப்புக்காடி மிகவும் அதிகப்பட்டு, புளித்த ஏப்பம், மாந்தம், புளிச்ச வாந்தி, வயிற்றுப்போக்கு (பச்சையாயும் புளிப்பு வாடையுடனும்) வயிற்று உப்பிசம், வயிற்றில் எரிச்சல், நெஞ்சு எரிச்சல், அஜீரண சுரம், வலி. குடல் பூச்சிகள் முதலிய வியாதிகள் தோன்றும்.

**நாக்கின் குறி:**—நாக்கு ஈரமாயும், தடித்த மஞ்சளான, வெண்மையான மாசு படிந்தும் இருக்கும். வாயின் மேற்கூரையிலும் இம்மாதிரி மாசு படிந்திருக்கும். இக்குறிக

ளுடன் காணும் சகல ரோகங்களுக்கும் இவ்வுப்பு தேவைப்படும்.

**முக்கிய உபயோகம்:**—(1) புளிப்பு மிகுதியாகி ஏற்படும் முழிவாதம் (ருமாடிசம்.) குழந்தைகள் இரவில் பற்களை நறநறவென்று கடித்தல், சாப்பிட்டவுடன் ஏற்படும் இருதய நடுக்கம், ஆயாசம், படபடப்பு, மச்சுப்படி ஏறும்பொழுதும், ஸ்திரீ போகத்திற்குப் பின்னும் ஏற்படும் இருதய பலவீனம், இருதய நோய்களுக்கும், புளித்த வியர்வை, மலம் புளித்த வாடையுள்ள சகலருக்கும் ஏற்படும் பற்பல வியாதிகளுக்கும் நேட்ரம் பாஸ் சிறந்த மருந்து.

(2) **சுரம்:**— காய்ச்சல் இருக்கும்பொழுது பகலில் கால்கள் ஜில்லென்றும் இரவில் தலைவலியுடன் கால் எரிச்சல் அல்லது உடல் பூருவும் எரிச்சல் இருக்கும். நேட்ரம் பாஸ் 30x-ல் கொடுக்கவும்.

**குழந்தைகளுக்கு** ஷை சுரத்துடன் வயிற்றில் பூச்சிகளின் காரணமாய் கண் விழிகள் சொருகுதல் ஏற்படின் இது உதவும் (அது சமயம் ஷை குழந்தைக்கு கண் நோய் ஏற்பட்டு மஞ்சளான பீளை வெளி வந்துகொண்டும் இருந்தால் நல்ல பலன் ஏற்படும்.)

(3). **சர்ம நோய்கள்:**—தோலில் அரும்பு மாதிரி இருக்கும் சினப்புகள் அல்லது வேர்க்கூரு. உடல் பூருவும், அரிப்பு சொரிந்தால் மஞ்சளான நீர் கசியும். பிறகு புண்ணாகித் தோல் தடிக்கும். கரப்பான், சொறி சிரங்கு, காதில் சீழ்வருதல், பேய்ச்சொரி (Urticaria or Nettlerash) அதாவது கடுமையான அறிப்புடன் சருமத்தடிப்பு ஏற்படும். ஆண்களின் விதைப்பையின் தோல், ஆண் குறி நுனி, அரையிடுக்கு இவைகளில் அறிப்பு, கட்டிகளை ஆரம்பத்திலேயே வராமல் தடுக்க உதவும்.



**கவனிப்பு:**— குழந்தைகளுக்குக் கிரைப் வாட்டர் போன்றவைகள் கொடுப்பதற்குப் பதில், பெர்ரம் பாஸையும், நேட்ரம் பாஸையும், மாற்றி மாற்றிக் கொடுத்து வரலாம்.

## 11. நேட்ரம் சல்ப்யூரிகம். (Natrum Sulphuricum)

இந்த உப்பு சரீரக் கெபிகளிலும், அணுக்களிலும் காணப்படுவதில்லை ஆயினும் திண நீர்ப் பகுதிகளிலும், அணுக்களின் இடையே உள்ள நீரிலும் காணப்படுகின்றது. உடலில் ஏற்படும் அசுத்தக் கழிவு நீர்த்தேக்கத்தைப் (சரீரத்திற்குப் தேவைப்படாத நீர்களை) பிரித்து வெளியேற்றும் சக்தியை உடையது. நேட்ரம்மூர் என்ற உப்பினால் உடலிற்கு வேண்டிய (அவசியமான) நீர்களைப் பிரித்துப் பல பாகங்களுக்கு அனுப்பப்படுகின்றது. நேட்ரம்சல்ப் என்ற உப்பினால் சரீரத்தின் பல பாகங்களிலிருந்தும் அசுத்த நீர்களைப் பிரித்து கிரஹித்து இழுக்கப்பட்டு வெளியேற்றப்படுகின்றது. இவ்வுப்புக் குறைவால் கீழ்க்கண்ட நோய்கள் ஏற்படுகின்றது. கல்லீரலினால் ஏற்படும் கோளாறுகள், பித்தக்கோளாறினால் ஏற்படும் அஜீரணம், பித்தவாந்தி, வாய் கசப்பு, பாதம் அடி வயிற்றின் நீர் சுரப்பு, இன்புளுயன்சா சுரம், ஈரக்கசிவு, நீரடிப்பிரதேசம், ஈரகைப்புள்ள வாசஸ்தலங்கள் முதலிய இடங்களில் வசிப்பதினாலும் ஏற்படும் சில நோய்கள், நீரழிவு, முறை சுரம், தோலின் மேல் சீழ் பிடித்த சிறிய கொப்புளங்கள், கச கசவென்று நீரைக் கக்கும் சர்மப்படை நோய் ஆகியவைகளுக்கு இந்த உப்பு சிறந்த மருந்தாகும். மேலும் இரத்தம் கெட்டுப்போய் விஷத்தன்மை அடையும் நிலையிலும் இதைக் கொடுக்கலாம்,

**நாக்கின் குறி விசேஷக் குறியாகும்:**- அதாவது ஒரு மாதிரியான பழுப்பும், பச்சையான நிறமும், கலந்த மாசுபடிந்திருக்கும்.

**பொதுக் குறி:**—காலை நேரங்களிலும், மழைக் குளிர் காலங்களிலும் உபாதைகள் அதிகமாகும். இடது பக்கம் படுத்தாலும் அதிகப்படும்.

**முக்கிய உபயோகம்:**—(1) பித்தக் காமாலை, நீரழிவு, நீடித்து காலை நேரங்களில் அதிகமாகும் வயிற்றுப்போக்கு இவைகளுக்கு பெர்ரம்பாஸ்-டன் இவ்வுப்பையும் மாற்றி மாற்றிக் கொடுக்கவேண்டும்.

(2) **மேக வெட்டை:**— கிரந்தி, பரங்கிப்புண் போன்றவைகளின் கழிவுப் போக்குப் பச்சையும், பழுப்பும் கலந்த நிறமாயிருந்தால் இது தேவைப்படும்.

(3) **பாதம், பீஜப்பை**, அடி வயிறு இவைகளில் ஏற்படும் நீர்ச் சுரப்பு வியாதிகளுக்கு 30x வீரியத்தில் கொடுக்கவும்.

(4) நீடித்தும், கச கசவென்று நீரைக்கக்கும் படைகள், அரிப்புடன், தொடையிடுக்கிலும், பீஜத்தைச் சுற்றிலும் இருந்தால் நேட்ரம்சல்ப் 200x வீரியத்தில் கொடுக்கவும்.

(5) எப்பொழுதே தலையில் அடிபட்டுக் குணமாகி சில ஆண்டுகள் கழிந்த பிறகு, ஏற்படும் மூளைக் கோளாறுகளுக்கும் 200 வீரியத்தில் கொடுத்துவர வேண்டும். தலையில் அடிபட்டவுடன் ஏற்படும் மூளைஅதிர்ச்சி கோளாறுக்கு 3x-ல் கொடுக்கவும்.

(6) பித்த நீர், பச்சையான வாந்தி, வாய்க் கசப்பு, வயிற்றில் உப்பிசமும், வலியும், மலம் கழியும்போது பலத்த சப்தத்துடன் வாயு பிரிதல் போன்ற உபாதைகளுக்கு 6x வீரியத்தில் கொடுக்கவும்.

**எச்சரிக்கை:**—எந்தவிதமான இரத்த ஒழுக்கிற்கும் நேட்ரம் சல்ப்யூரிகம் கொடுக்கக்கூடாது.



## 12. சைலீஷியா அல்லது ஸிலிகா. (Silicea or Silica)

இந்த உப்பு உடலின் இணைக்கும் தசைகளிலும், தோல், நகம், சுரப்பிகள், தலைமயிர், எலும்பின் வழு வழுப்பான பகுதி, நரம்பின் மேல்மூடித் தசைகளிலும் சிறிதளவு இருக்கின்றனது. சரியான உடல் வளர்ச்சியில்லாத குழந்தைகளுக்கும், போஷாக்கு இல்லாத சரீரங்களுக்கும் இது நல்ல மருந்து. இவ்வுப்புக் குறைவால், இராஜபிளவை, பிளவைக் கட்டி, சீழ்கோர்த்துக்கொள்ளும் கொப்புளங்கள், கண்டமாலை, கணைச்சூடு, விரல்சுற்றி, நகச்சுற்றி, இமைகளில்கிறுக் கட்டி, கல்லீரலில் கட்டி, பெண்களின் ஸ்தனக்கட்டி, உள்ளங்கால், உள்ளங்கைகளில் சதாவியர்வை, கஸ்கங்களில் துர் நாற்றமுடைய வியர்வை, நகங்கள் கோணலாக வளருதல் போன்ற வியாதிகள் ஏற்படும். கட்டிகளை பழுக்க வைத்து சீக்கிரம் உடைத்து, சீழ்களை வெளியேற்றுவதில் தலை சிறந்தது.

**முக்கியக் குறிகள்:**— பெரியவர்களுக்கு எப்பொழுதும் உடலில் ஜில்லென்ற உணர்ச்சியும், கூச்சமும்இருக்கும். கை, கால், பாதங்களிலும் சதா வியர்வை. குழந்தைகளின் தலை, கழுத்துப் பாகங்களில் வியர்வையும், பருத்த வயிறும் (தொப்பைபோல்) மிகச் சிறிய காயங்கள், வேர்க்கூரு போன்றவைகள் கூட சீழ்பிடிக்கும் நிலைமையிலுள்ள சரீரம், அதி யுணர்ச்சியுடைய உடல், ஸ்திர புத்தி, சிந்தனை சக்தி குறைந்தவர்கள்.

**முக்கிய உபயோகம்:**— (1) தலை கிறுகிறுப்பு, வலது பக்கத்தில் தலைவலி, பின் கழுத்திலிருந்து மேலேவரும் தலைவலி, படிப்பு, சிரமம், சப்தம், அதி வெளிச்சம் இவைகளினால் அதிகமாகும், உஷ்ணம், சூடான ஒற்றிடங்களால் சமனப்படும். நீண்ட நாட்களாக காதில் சீழ்வருதல், நடுக்காதில் வலி இருக்கும், நீடித்த ஜலதோஷம், மண்டைச்

சளி, மூக்கின் நுனியில் சதா அரிப்பு. மூக்கு எலும்புகளில் ரணம். சிலிகா 12x கொடுக்கவும்.

(2) குழந்தைகள் முகம் வெளுத்து, ஜீரண சக்தி குறைந்து, புளிப்பான அஜீரண மலம் கழித்து, தொப்பை வயிறுடன் கொஞ்சம் கொஞ்சமாக இளைத்துவரும் குழந்தைகளுக்கு அடிவயிற்றில் கணைச்சூடும் இருந்தால் சிலிகா 12x கொடுக்கவேண்டும். பிறகு லைசோபோடியம் 30x இரண்டு தடவையும், பெர்ரம்பாஸ், கல்கேரியா பாஸ் 6x பத்துத்தடவைகள் கொடுக்கவேண்டும். **நரம்பைப் பற்றிய** காக்கை வலிப்பு நோய் பகலில் இல்லாமல், இரவில் வருவதும், அதிலும் அம்மாவாசை, பௌர்ணமி தினங்களில் ஏற்பட்டால் சிலிகாவைக் கொடுக்கலாம்:

(3) மலச்சிக்கலில், மலம் பாதி வெளிவருவதும், மீண்டும் உள்ளே இழுத்துக்கொள்ளப்படுவதும். சில சமயம் ஆட்டுப்புழுக்கைபோல் சிறியதாகவும், இறுகியும் உதிறும், (12x-ல் கொடுக்கவும்) நெற்றியில் வியர்த்தும், பொறுக்க முடியாத நாற்றமும் உள்ள வயிற்றுப் போக்கில் மலம் தண்ணீராயும், மஞ்சளாயும் இருக்கும்.

(4) பல்வலி, அதிலும் இரவில் தாங்க முடியாத வலி, குழந்தைகளுக்கு பற்கள் முளைப்பதில் சிரமமும், போஷாக்கு இல்லாமலும் இருந்தால் 12x-ல் கொடுக்கவும்

(5) போஷாக்குக் குறைவால் நோஞ்சலான குழந்தைகளின் இருமல், தொண்டைக் கம்மல் (இரவில் தூக்கத்தில் ஏற்படும், வியர்வை தலையில் காணும்) 12x-ல் உபயோகம்,

(6) பாதம், கை, கால்களில் ஏற்பட்ட வியர்வையை தடைப்படுத்திய காரணத்தினால் உண்டாகும், கண்ணில் சதை வளர்ச்சி (Trachoma) கண்பார்வையில் கோளாறுகள் இவைகளுக்கு சிலிகா 30x-ல் கொடுத்தால் மீண்டும் மறைந்த வியர்வையை உண்டாக்கிக் குணத்தைக் கொடுக்கும்.



குறிப்பு – (1) முன் சொன்ன கட்டிகள், சிரங்குகளுக்குக் குறைந்த வீரியத்தில் கொடுத்தால் சீக்கிரம் சீழ் பிடிக்கச் செய்து உடைத்துவிடும். 30-க்கு மேல்பட்ட வீரியங்களில் கொடுத்தால் சீழ் கோர்த்துக்கொள்வதைத்தடுத்து உள்ளேயே மறைத்துவிடும். ஆனால் ராஜபிளவை, விரல் சுற்றி, நகச்சுற்றி போன்ற நோய்களில் 6-வது வீரியம் கொடுத்தாலே அவைகள் தடைப்படுத்தப்படுகின்றது.

(2) எந்த உபாதையும், **இரவிலும், அம்மாவாசை** தினங்களிலும் அதிகமாவதும், அதிலும் குளிர்காலத்திலும், குளிரிலும் அதிகரித்து கோடை காலத்திலும், போர்த்திக் கொள்வதினாலும், சூடான ஒத்திடங்களினாலும் சமனப்பட்டு குறைவதும் இந்த மருந்தின் பொதுக்குறிகள் ஆகும்.

# பயோகெமிஸ்டிரி வைத்திய முறைகள்.

வியாதி விபரங்கள், குறிகள், வியாதியின் காரணங்கள் முதலியவைகளைப் பற்றி பின் வரும் அத்தியாயங்களில் தெரிந்து கொள்ளவும் பொதுவாக சில வியாதிகளின் பெயரைச் சொல்லி அதன் கீழ் வியாதிகளுக்கு பயோ கெமிக் சிகிட்சை விபரங்களை இப்பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

(1) **சுரம் வகைகள்:**— (a) சாதாரண சுரம் (Simple Fever) எல்லாவித சுரங்களுக்கும் முதன் முதலில் கொடுக்க வேண்டிய மருந்து **பெர்ரம் பாஸ்** 6x பிறகு 2-வது கட்டத்தில், மலபந்தம் நாக்கில் வெண்படலம் (வெண்மை மாசு) படிந்திருந்தால் **காலிமூர்** 6x. (இந்த இரண்டையும் மாற்றி, மாற்றிக் கொடுக்கவும்.)

(b) வியர்வை ஏற்படாமலும், மாலை நேரங்களில் அதிகமாயும், நாக்கில் லேசான மஞ்சள் மாசும் படிந்திருந்தால் **காலிசல்ப்** 30xம் வியர்வையும்ஏற்பட்டுஅதிக அமைதியற்ற தன்மை, துரிதமான நாடி அல்லது தாறுமாறான நாடி மிகுந்த பலவீனம் பின்னர் மயக்கம் ஏற்படின் **காலிபாஸ்** 6x.

(c) மூக்கிலும், கண்களிலும் நீர் படிந்தும், காய்ச்சலும் இருப்பின் **நேட்ரம் மூர்** 30x. **பெர்ரம் பாஸ்** 30x.

**(2) டைபாயிட் அல்லது ஜன்னி பாத சுரம்** (Typhoid Fever).

(a) சிகப்பு ரத்தம் ஒழுகினால் பெர்ரம் பாஸ் 6x அல்லது 30x. கருத்து உறைந்துபோகும் ரத்தம் ஒழுகினால் காலிமூர் (நாக்கில் வெள்ளை மாசு, வயிற்றில்வாயு, உப்பிசம், இளகிய லேசான மஞ்சள் நிறத்தில் மலம் போனால் **பெர்ரம் பாஸ், காலிமூர்** இரண்டையும் மாற்றி, மாற்றிக் கொடு.

(b) மிகவும் முக்கியமான மருந்து **காலீபாஸ்** நீர் போன்ற வாந்தி, மிகுந்த பலவீனம், இசிவு, மயக்கம் ஏற்பட்டால் **நேட்ரம் மூர்**.

**(3) மலேரியா என்ற குளிர் முறை சுரம்** Malaria.

(a பிரதானமான மருந்து **நேட்ரம் சல்ப்,**
(b) அதிகமான வியர்வை ஏற்படின் **காலீ பாஸ்**
(c) நாக்கு வெண்மையாயிருந்தால் **காலீ மூர்**
(d) காலில் கெண்டையேறினால் **மாக்னீஷியா பாஸ்**

(e) குறிப்பிட்டாற்போல் காலை 10 மணிக்கே சுரம் வரும். தாகம், தலைவலி, முதுகுவலி, உதடுகளில் சிறு சிறு கொப்புளங்கள் போன்ற குறிகள் இருந்தால் **நேட்ரம் மூர்.**

(f) நீடித்த குளிர் சுரங்களுக்கு **கல்கேரியா சல்ப்** இடையே கொடுத்துக் கொண்டு **காலீ பாஸ்** கொடுக்க வேண்டும். உண்ட உணவை அப்படியே கக்கிக்கொண்டு வரும் சுரத்திற்கு **பெர்ரம் பாஸ்** கொடுத்த பிறகு **காலீபாஸ்** கொடு.

(4) நிமோனியா என்ற கபவாத சுரம் Pnemmonia)

(a) முதன் முதலில் **பெர்ரம், காலீமூர்,** மாற்றி மாற்றிக் கொடுக்கவும்.



(b) வெள்ளை நிறத்தில் கோழை, இருமல், மார்பில் வலி இருந்தால் சாலீமூர். கோழையானது மஞ்சள் நிறமாகக் கட்டி கட்டியாக வெளியேறினால் கல்கேரியா ப்ளோரிகம், இரத்தமும், சீழ்போன்ற கோழையும் வெளியானால் **கல்கேரியா சல்ப்.** கோழையே வராமல் உள்ளே போய் விடின் **காலீசல்ப்.**

## (5) ப்ளுரசி என்ற சுவாசகோச உறை தாபிதச் சுரம் (Pleurisy)

முக்கியமாய் **மெக்னீஷியா பாஸ், பெர்ரம் பாஸ், காலீமூர்** மூன்றையும் மாற்றி, மாற்றிக் கொடு.

## (6) க்ஷயம் (Tuber Culosis of the Lungs)

(a) பிரதானமான மருந்துகள், **சைலீஷியா, மெக்னீஷியா, கல்கேரியா பாஸ், நேட்ரம் பாஸ்** (பெர்ரம் பாஸ் அடிக்கடி உதவும்.

(b) கோழையில் இரத்தம் கலந்து மஞ்சள் நிறச் சளியுடன் இருமித் துப்பினால் **கல்கேரியா சல்ப்** 6x கொடு. நுரைத்து இரத்தம் வந்தால் **நேட்ரம் மூர்** 6x கொடு.

(c) இரவில் லேசான வியர்வைக்கு **கல்கேரியா பாஸ்.** இரவில் கடுமையான வியர்வையுடன் சரீரம் இளைத்திருப்பவர்களுக்கு, ஜில்லென்ற உணர்ச்சியும், மலச்சிக்கலும் இருப்பின், **சிலிகா** 12x கொடு.

(d) **கூட்டு முறைப் பிரயோகம்** :-

டி. பி. யில் நாள்பட்டு இருக்கும் சுரங்களுக்கு,

| | | | |
|---|---|---|---|
| கல்-சல்ப் 3x | மாக். பாஸ் 3x | சைலீஷியா 12x | இவைகளை |
| பே. பாஸ் 12x | நா. மூர் 3x | சமன் எடை அளவாக | |
| கா. பாஸ் 3x | நா. சல்ப் 3x | எடுத்து அரைத்துத் | |

தண்ணீரில்-கொடு.) (2 முதல் 3 அரிசி எடை சுடு தண்ணீரில்) காச்சலுடன் நுரையீரலிலிருந்து இரத்தம் வந்தால் கல்-ப்ளோர் 3x கல்-சல்ப் 3x. கல். பாஸ் 12x. காலீபாஸ் 3x. காலீசல்ப் 3x. நே மூர் 3x. சிலிகா 12x ஷ்டி விகிதத்தில் எடுத்துக் கலந்து கொடு.

## (7) மூளை சுரம் :- (Meningitis)

(a) முதலில் காலீமூர். பெர்ரம் பாஸ் மாற்றி மாற்றிக் கொடுத்த பிறகு காலீபாஸ் கொடு. இடை நடுவே **கல்கேரியா பாஸ், நேட்ரம் மூர்** 6x கொடு.

(b) சிலிகா 12x. கல். பாஸ் 12x. பெ. பாஸ் 12x. சா மூர் 3x, காலி. பாஸ் 3x. மெ. பாஸ் 3x. நே. மூர் 3x. நே. சல்ப் 3x இவைகளை சமனெடை எடுத்து அரைத்து 1 முதல் 2 கிரைன் வீதம் கொடு.

## (8) அம்மை நோய்கள் :- பெரியம்மை (Small Pox)

முதலில் பெர்ரம் பாஸ், காலீமூர் கொடு. பிறகு முத்துக்கள் போட்டவுடன். காலீமூர். நேட்ரம் பாஸ் கொடு. வாயில் எச்சில் ஊறிக்கொண்டும். முத்துக்கள் ஒன்றோடொன்று சேரும் பொழுது. **நாட்ரம் மூர்** கொடு. முத்துக்கள் வாடி, வடுக்களாகவும், பொறுக்குகளாகவும் ஏற்பட்ட பின் காலீ சல்ப் கொடு.

## (9) சிச்சிலிப்பை (Chicken Pox)

(a) பெர்ரம் பாஸ், காலீமூர் முக்கிய மருந்து.

(b) அம்மை உள்ளே மறைந்து அதனால் ஏற்படும் கோளாறுகளுக்கு **காலீ சல்ப், பெர்ரம் பாஸ்** மாற்றி, மாற்றிக்கொடு.



(c) சரிவர கவனியாது விடப்படும் வியாதிகளுக்கு **கல்கேரியா சல்ப்** ஒருடோஸ் கொடுத்து பின்னர் சிலிகாவைக் கொடு.

## (10) மணல்வாரி (Measles)

முதலில் கா. மூர். பெ. பாஸ் கொடு. பிறகு மூத்திரத்தில் உப்புச் சத்து இருந்தால் **கல். பாஸ்** கொடு. சர்மம் உறியும் சமயத்தில் காலீசல்ப் கொடு.

## (11) தாளம்மை (Mumps)

இதை பொன்னுக்கு வீங்கி என்பார்கள். சுரம் இருப்பின் **பெர்ரம் பாஸ், காலீமூர்** மாற்றி மாற்றியும்; பீஜப் பையில் வீக்கம். வாயில் அதிக எச்சில் இருப்பின் **நேட்ரம் மூர்** கொடுக்கவும். காதுக்குக் கீழே வீக்கம் குறையாமல் கெட்டியாக இருப்பின் **கல்கேரியா ப்ளோர்** கொடு.

## (12) பிளேக்கு :- (Plague)

பிரதான மருந்து **காலீமூர்,** பெர்ரம்பாஸ். அசதிரேக பலவீனம் இருந்தால் **காலீபாஸ், நேட்மூர்** கொடு.

## (13) அபோப்ளக்ஸீ (APoplexy)

(a) முக்கியமாக, மெக்னீஷியா பாஸ், காலீபாஸ் மாற்றி மாற்றிக் கொடு. வியாதியை வரவிடாமல் தடுப்பதற்கு கல்கேரியா பாஸ், வியாதி வந்து முடிந்த பிறகு **சிலிகா.**

(b) வாயில் அதிகமாக எச்சில் ஊறினால் நேட்ரம் மூர்.

## (14) அஜீர்ணம் (Indigestion)

(a) நாக்கில் வெண்மை நிறமாக இருப்பவர்களுக்கு, நாக்கில் கசப்பும் இருந்து (எண்ணெய்ப் பண்டங்கள் தின்றதினால்) ஏற்படும் அஜீர்ணத்திற்குக் காலீமூர் கொடு.

(b) சாப்பிட்டவுடன் எரிச்சல் வலி உடனே ஏற்படின் பேர்ரம் பாஸ். வயிற்றை இறுக்கும் மந்தமான வலி, உப்பிசம், ஆகாரம் எதிர்க்கழிக்கப்படுதல், விக்கல் ஏற்படின் மெக்னீஷியா பாஸ்.

(c) வாயில் எச்சில் அதிகம், மலச்சிக்கல், வயிற்றில் வலி தாகம் இருப்பின் நேட்ரம் மூர்.

(d) கொழுப்பான ஆகாரங்களைச் சாப்பிடுபவர்களுக்கு வயிற்றில் புளிப்புத் தட்டி, நெஞ்சு எரிச்சலுடன் வயிறும் உப்பியிருப்பின் நேட்ரம் பாஸ்.

(e) பித்தம் அதிகரித்து, கசப்பான ருசியும், மஞ்சளான வாந்தியும், குடல்களில் அதிகமான காற்று உற்பத்தியாகி உறுமலும், பிசையும் வலியும் ஏற்படின் நேட்ரம் சல்ப்.

N. B:- மேற்படி மருந்துகளை குறிகளுக்குத் தகுந்தாற்போல் நீடித்த கேஸ்களுக்குக் கொடுக்கும் பொழுது கல்கேரியா பாஸ் இடையிடையே கொடுத்தால் சீக்கிரம் பலன் கிடைக்கும்.

## (15) அப்பெண்டிஸிட்டிஸ் (Appendicitis) அல்லது குடல்வால் அழற்சி நோய்.

இந்நோய்க்கு ஆரம்பத்தில், காலீமூர், மெக்னீஷியா பாஸ், சிலிகா நல்ல மருந்துகள். முற்றின கேஸ்களை ஆப்பரேசன் செய்வதுதான் நலம்.



## (16) அக்கி (Erysipelas)

பேர்ரம் பாஸ், காலீமூர் மாற்றி, மாற்றிக் கொடு. மயக்கம், பலவீனம், அசதி ஏற்படின் காலீபாஸ். சிறிய கொப்புளங்கள் தோன்றும்போது காலீசல்ப். பித்தமாக வாந்தி வந்தால் நேட்ரம் சல்ப்.

## (17) ஆசனப் பவுத்திரம் (Fistula)

(a) முக்கியமான மருந்துகள் ஆரம்பத்தில் பேர்ரம் பாஸ். 2-வது கட்டத்தில் பழுப்பு நிறத்தில் நீர் கசிந்தால் காலீமூர். 3-வது கட்டத்தில் பிசுக்கென்ற சீழ் வருவதும், மாலை நேரங்களில் அதிகப்பட்டும் இருப்பின் காலீசல்ப்.

(b) மஞ்சள் நிறமான சீழ், புளிப்பான வியர்வை இருப்பின் சிலிகா, நேட்ரம் பாஸ் மாற்றி, மாற்றிக் கொடு.

(c) நீடித்த கேஸ்களில் ரணத்தின் ஓரங்களில் கெட்டிப்பட்டு, சதா சீழ் வந்துகொண்டேயிருந்தால் கல்கேரியா ப்ளோர்.

## (18) ஆண் தன்மைக் குறைவு (Impotency)

முதலில் காலீபாஸ், நேட்ரம் பாஸ், பின்னர் கல்கேரியா பாஸ் கொடுக்கவும்.

## (19) ஆஸ்துமா அல்லது சுவாச காசம் (Asthma)

(a) காற்றடி காலங்களில் தவருமல் வரும் ஆஸ்துமா விற்கும், நரம்புச் தளர்ச்சி பலவீனங்களினால் ஏற்படும் காசத்திற்கும் காலீபாஸ். நாக்கில் வெண்மை நிறம் காணப்படின் காலீமூர். மஞ்சள் சளி, சாயங்காலம்

ஆஸ்துமா அதிகரித்தல், இரத்தக் குறைவு இருப்பவர்களுக்கு காலீசல்ப்.

(b) இருமும் பொழுது கண்களில் நீர்வடிந்தும், வாயில் எச்சில் ஊறிக்கொண்டும், நுரைபோன்ற கோழையும் இருந்தால் நேட்ரம் மூர். பச்சை நிறச்சளியுடன் மழைக் காலங்களில் அதிகமாகும் ஆஸ்துமா, அல்லது சர்ம வியாதிகளுடன் வரும் ஆஸ்துமா அல்லது சிறங்கு சொறி இவைகளை பலமான வெளிப்பூச்சு மருந்துகளால் உள்ளே அமுக்கியதால் ஏற்படும் ஆஸ்துமாவிற்கும் நேட்ரம் சல்ப் கொடுக்க வேண்டும்.

(c) வயதானவர்களின் ஆஸ்துமாவிற்கு, சிலிகா அல்லது கல்கேரியா சல்ப், இரவில் அதிகமாகும் கேஸ்களுக்கு முதலில் ஸிலிகாவும், பின்னர் கல்கேரியா பாசும் மாற்றி, மாற்றிக் கொடு.

(d) பொதுவான கூட்டுமுறை ஔஷதம் :-

காலீபாஸ் 6x, மாக்னீஷியா பாஸ் 6x, நேட்ரம் மூர் 6x, நேட்ரம் சல்ப் 6x இத்துடன் ஹோமியோ தாய்த் திராவகமாகிய "க்ரிண்டீலியாரோபஸ்டா" என்ற மருந்தையும் சேர்த்துக் கலந்து 2 அரிசி எடை வீதம் நாள் ஒன்றுக்கு 4 தடவை கொடுக்கவும். தூக்கம் வருவதற்கு இடையிடையே, பாசிப்ளோரா இன்கார்னேட்டா q வைக் கொடுக்கவும்.

## (20) இரத்தக் கட்டிகள், சீழ் கட்டிகள் (Abscess or Boils)

(a) முதலில் பெர்ரம் பாஸ், காலீமூர், இடையிடையே காலீபாஸ், கட்டி பெரியதாகி விடின் "சிலிகா"வைக் கொடுத்து உடைத்து, பிறகு கல்கேரியா சல்ப் கொடு. நீடித்த ரணங்களுக்கும் கல்கேரியா சல்ப்.



(b) எலும்பைத் தாக்கிய ரணங்களுக்கு கல்கேரியா ப்ளோர். கால்களில் நாள்பட்டுப் புரையோடிய ரணங்கள் மங்கிய கறுப்பாக மாறி (கருநீல நிறமாக) ரணங்களின் ஓரத்தில் இருந்து, நீர் போன்றும் பச்சை நிறமாகவும் கலந்து சீழ் வடிந்தால் நேட்ரம் சல்ப் கொடு.

குறிப்பு :- கட்டிகள் வராமல் தடுப்பதற்கு முன்னெச்சரிக்கையாக, நேட்ரம் பாஸ் அடிக்கடி கொடுத்து வந்தால் கட்டி வராது.

## (21) இரத்தச் சோகை (Anaemia)

(a) முக்கியமான மருந்துகள் கல்கேரியா பாஸ், பெர்ரம் பாஸ், நேட்ரம் மூர் மனவருத்தமாய் ஏற்படின் காலீபாஸ்.

(b) மலம் வெளுத்தும், சர்மத்தில் அக்கி, புண், சிரங்கு கிளம்பியும் இருப்பின் காலீமூர், பிறகு காலீசல்ப்.

(c) பானைபோல் வயிறு பெருத்தும் உடல் சிறுத்தும் உண்ட உணவுச்சத்து உடலில் ஒட்டாமல் பலவீனமாய் இருப்பின் சிலிகா

## (22) இரத்த வாந்தி (Blood-Vomitting)

வாந்தியாகும் இரத்தம் சுத்த சிவப்பாக இருப்பின் பெர்ரம் பாஸ் 30x-ம், கறுப்பாகவும், பிசுக்கென்று ஒட்டிக் கொள்ளும் தன்மையுடனும் இருந்தால் காலீமூர் 30x-ம். நுரைத்தும் எச்சில் அதிகமாயும் கலந்திருந்தால் நேட்ரம் மூர் 30x-ம். ஆயாசம், அசதி, சுரம், சிவப்பான இரத்தம் இருந்தால் காலீபாஸ் 30x-ம்.

## (23) இராஜ பிளவை (Carbuncle)

முதலில் பெர்ரம் பாஸ், காலீமூர், பிறகு சிலிகா, கல்கேரியா சல்ப்.

## (24) இருதய நோய்கள் (Heart Diseases)

(a) உடல் பலவீனம், பொதுவாக இருதய படபடப்பு, சரீரத்தில் நடுக்கம் இருந்தால் கல்கேரியா பாஸ் 6x. அவீனாசடீவா Q மாற்றி, மாற்றிக் கொடு.

(b) சுரத்துடன் படபடப்பு ஏற்படின், பெர்ரம் பாஸ் 30x-ம், கிரடேகஸ் Q வும் மாற்றி, மாற்றிக் கொடு.

(c) கவலை மிகுந்தும், அல்ப காரணங்களினால் இருதய படபடப்பும் இருந்தால், காலீபாஸ் 30x-ம், சோகை பாண்டு வீக்கம், இருதயத்தில் வலி, படபடப்பு இருப்பின் நேட்ரம் மூர் 30x-ம் கொடுத்து வரும்போது இடையிடையே பாசிப்ளோரா, இன்கார்நேட்டா தாய்த் திராவகத்தையும் கொடுத்தால், தூக்கம் கெடாமல் நோய் சீக்கிரம் குறையும்.

## (25) இருமல் (Cough)

(a) குழந்தைகளின் இருமலுக்கும்; பலத்த இருமல், வெண்மையானச் சளி, நாக்கில் வெண்படலம் இருந்தால் காலீமூர் 30x இத்துடன் ஜஸ்டீஷியா ஆடாதோடா Q வையும் மாற்றிக் கொடு.

(b) சுரக் குறிகளுடன் வரும் வரண்ட இருமலுக்கு பெர்ரம் பாஸ் 30x-ம், சளியினால் மார்பில் தயிரைக் கடைவது போன்ற சப்தத்துடன் இருமி வெளியேறும் கோழை மஞ்சள் நிறமாக இருந்தால் காலீசல்ப் 30x-ம் சுவாசத்



தடை கயிறுபோன்ற கோழை இருப்பின் கல்கேரியா பாஸ்.

(c) இரவில் அதிகமாவதும், வலி ஏற்பட்டு சில மணி நேரம் மட்டிலும் இருமல் இருப்பின் மெக்னீஷியா பாஸ்.

(d) பெர்ரம் பாஸ் 12x, காலீமூர் 12x, மெக்-பாஸ் 12x, கல்-பாஸ் 12x இவைகளை சமன் எடை எடுத்து அரைத்துக் கொடுக்கவும்.

குறிப்பு:– பெர்ரம் பாஸ் கொடுக்கும்போது இடையே கல்கேரியா சல்ப் ஒருடோஸ் கொடு. மற்ற மருந்துகள் கொடுக்கும்போது கல்கேரியா பாஸ் இடையிடையே கொடுக்கவும்.

Whooping Cough கக்குவான் என்ற இருமலுக்கு மெக்னீஷியா பாசும், கல்கேரியா பாசும், பெர்ரம் பாசும், மாற்றி, மாற்றிக் கொடு. முற்றிப்போன கேஸ்களில் பெர்ரம் பாஸ் கொடுக்காமல், கல்-பாஸ்; காலீ-மூர்; காலீபாஸ், காலீசல்ப், மெக்-பாஸ்; நேட்ரம் மூர் 6x வீரியத்தில் எடுத்து நன்றாக அரைத்து வெந்நீரில் கலக்கிக் கொடுக்கவும்.

## (26) பாரிச வாயு, (Paralysis)

(a) முக்கியமான மருந்துகள், காலீபாஸ், மெக்னீஷியா பாஸ் 30x வீரியத்தில் தான் கொடுக்கவேண்டும்.

(b) கல்-பாஸ்; கல்-சல்ப்; காலீ-பாஸ், மாக்-பாஸ்; நேட்ரம் மூர்; நேட்-பாஸ் இவைகள் எல்லாம் 30x லும், சிலிகா 12x லும், ஒன்றாகக் கலந்து வெந்நீரில் கொடு.

## (27) வாதரோகம் அல்லது முழிவாதம் (Rheumatism)

(a) முதலில் மூட்டுக்கள் பாதிக்கப்பட்டால் நேட்ரம் பாஸ். வலியானது அடிக்கடி இடம் மாறிக் கொண்டிருந் தால் காலீசல்ப். குடையும் வேதனை வலி அதிகமாக இருந் தால் மெக்னீஷியா;

(b) தசைகளும் பாதிக்கப்பட்டு வீக்கம் சிவந்திருந் தால் முதலில் நேட்ரம் பாஸ், பிறகு பெர்ரம் பாஸ் கொடுக்க லாம். வீக்கம் வெளுத்தும் வேதனையுடனிருந்தால் நேட் பாஸ்; நேட்-சல்ப்; பெர்ரம் பாஸ் மூன்றையும், மாற்றி, மாற்றிக் கொடு.

(c) மூட்டுகள் முடங்க நேரிடின் சிலிகா, நேட்ரம் பாஸ் கொடுக்கலாம்.

கூட்டுமுறை ஔஷதம் :- பெர்ரம் பாஸ், நேட்ரம் பாஸ், மெக்-பாஸ், காலீசல்ப், நேட்ரம் சல்ப் எல்லாவற் றையும் 6x வீரியங்களில் எடுத்து அரைத்துக் கொடுக்க லாம்.

## (28) முகத்தசை வாதம் (Chorea) அல்லது வலிப்பு

பிரதானமான மருந்து மெக்னீஷியா பாஸ் கொடுத்து வலிப்பு, துடிப்பு நின்றவுடன் அவரவர்களின் திரேக வாகுவை அனுசரித்து காலீபாஸ், கல்கேரியா பாஸ் மாற்றி, மாற்றியும், பிறகு மலக்கிருமியினால் ஏற்படும் வலிப்பிற்கு நேட்ரம் பாஸ். இசிவு, பயங்கரமான கனவு, ஓரக் கண் பார்வை, முகம் வெளுத்திருப்பவர்களுக்கு சிலிகா, நேட் பாஸ் மாற்றி, மாற்றிக் கொடுக்க வேண்டும்.



## (29) முகப்பரு (Pimples, Acne)

(a) சோகை பிடித்தவர்களுக்கு நேட்ரம் மூர்.

(b) வயதுவந்த ஆண், பெண்களுக்கு கல்கேரியா பாஸ்.

(c) ஆகார விகற்பங்களினால் விளையும் பருக்களுக்கு காலீமூர்

## (30) முதுகுப் பிடிப்பு, இடுப்புவலி (Backpains or Lumbago)

(a) ஆரம்பத்தில் பெர்ரம் பாஸ், காலீமூர் பிறகு கல்கேரியா ப்ளோர்.

(b) வலி காலையில் எழுந்திருக்கும்போது அதிக மாகவும், முதுகுப் பக்கம் ஜில்லென்ற உணர்ச்சியும் இருந்தால் கல்கேரியா பாஸ்.

(c) மாலையில் வலியானது அதிகமானால் காலீசல்ப்.

(d) வலியானது திடீர், திடீரென்றும் அடிக்கடி ஏற்பட்டு உஷ்ணமான ஒத்தடங்களினால் குறைந்திருப்பின் மெக்னீஷியா பாஸ்,

(e) அதிகநேரம் குனிந்திருந்து நிமிரும்போது முதுகில் படக் என்ற முறியும் சப்தத்துடன் வலி எடுக்கும். கடினமான இடத்தில் படுப்பதினால் வலி குறையும். காலையில் முதுகு அசதி நேட்ரம் பாஸ் கொடுக்கவும்.

## (31) மலச்சிக்கல் (Constipation)

(a) நாக்கில் மஞ்சள்நிற மாசுபடிந்தும், ருசியற்றும் இருப்பவர்களுக்கு காலீசல்ப். கொள்ளைக்குப் போகும் போது முதுகில் வலி எடுத்தால் நேட்ரம் மூர். நாக்கில்

வெண்மையான மாசும் குழகுழப்பாயும் இருந்தால் **காலீ**
**மூர்.** மலத்தை வெளியேற்றும் பொருட்டு முக்கி முயற்சி
செய்யும்போது மலம் பாதி வெளிவருவதும், மீண்டும்
உள்ளே இழுக்கப்பட்டு விடுவதுமாயிருப்பின் **சிலிகா.**
மலம் காய்ந்தும் கருகியும், தலைவலி, கிருகிருப்பு ஏற்படு
பவர்களுக்கு **கல்கேரியா பாஸ்.**

(b) **கூட்டுமுறை ஔஷதம் :-**

| | |
|---|---|
| கல்கேரியா ப்ளோர் 12x | சிலிகா 12x |
| காலீமூர் 6x | நேட்ரம் மூர் 6x |

வகைக்கு சமன் எடையாக எடுத்து அரைத்துக் கொடு.

N. B:- **நேட்ரம் பாஸ்** 2x பவுடரை 10 கிரைன்ஸ் எடுத்துக் கொடுத்தால் தாராளமாக மலம் போகும். நீடித்த மலச்சிக்கல் உடையவர்களுக்கு இத்துடன் **நேட்ரம் சல்ப்** 30x யும் மாற்றி, மாற்றிக் கொடு. பிறகு நிறைய தண்ணீரும், பழவகைகளும் சாப்பிட்டு வர வேண்டும்.

## (32) மூலநோய்கள் (Piles, Haemorrhoids)

(a) அடிக்கடி முதுகுவலி, தலையில் ரத்தக்கொதிப்பு முதலிய குறிகளுடன் ஏற்படும் உள்மூலம், வெளிமூலம், முதலிய மூலநோய்களுக்கு **கல்கேரியா ப்ளோர்** 6x, 30x கொடு. இரத்தச் சோகையுடன் இருப்பவர்களுக்கு **கல்கேரியா பாசும்** இத்துடன் மாற்றி, மாற்றிக் கொடுக்கலாம்.

(b) இரத்தம் கொட்டும் மூலத்திற்கு, சுத்த ரத்தமாகப் போனால் "**பெர்ரம் பாஸ்**". இறுகிய கருப்புநிறமாகப் போனால் "**காலீமூர்**" கொடுக்கவும். ஆசனம் வெளித்தள்ளுதல், மிகுந்த பலவீனம் உடையவர்களுக்கு "**காலீபாஸ்**". கல்லீரல், பித்தக்கோளாறுகளினால் அடி-



வயிற்றில் சூடும் பாதங்கள் வீக்கத்துடனும் இருப்பவர்
களுக்கு "**நேட்ரம் சல்ப்**" அபானத்தின் அருகே,
அரையிடுக்கு முதலிய இடங்களில் கச, கச என்ற வியர்
வையும், வாயில் எச்சில் ஊறுதலும் இருப்பவர்களுக்கு
"**நேட்ரம் மூர்.**"

(c) **இரத்தம் கொட்டும் மூலத்திற்குக் கூட்டு முறை மருந்து.** பெர்ரம்பாஸ் 30x, காலீபாஸ் 30x, காலீமூர் 30x, நேட்ரம்மூர் 6x, கல்-ப்ளோர் 6x, சமன் எடை எடுத்து அரைத்து வேளை ஒன்றுக்கு ஒரு அரிசி எடை வீதம் கொடுக்கவும்.

N. B. **இந்த மிக்ஸரை, உடலில் எப்பாகத்திலிருந்து இரத்த ஒழுக்கு ஏற்பட்டாலும் கொடுக்கலாம். முரட்டுப் புத்தியும் கருப்பு நிறமும் உடையவர்களுக்கு 30x க்குப் பதிலாக 12x ஆகவும், 6x க்குப் பதிலாக 3x ஆகவும் வீரியங்களை மாற்றிக் கலந்து கொள்ளவும்.**

## (33) மூத்திர உறுப்புகளின் வியாதிகள் (Urinery Disorders)

(a) இரத்தம் கலந்த மூத்திரம், மூத்திர வழியில் வேக்காடு நமைச்சல் இருக்கும். இருதய பலவீன முடையவர்களுக்கும், வயதானவர்களுக்கும் ஏற்படும் சிறுநீர் ஒழுக்கு, மூத்திரம் அடக்க முடியாமை போன்ற நோய்களுக்கு **காலீபாஸ்.**

(b) நீரழிவு, மதுமேகம் உடையவர்களின் மூத்திரத்தில் ஜவ்வுபோன்ற வஸ்து காணப்படுதல். சிறுநீர் பையில்

வலி, வேதனையும், சீழ்பிடித்து அடிக்கடி ஏராளமான சீழ் வெளியாவதும் போன்ற நபர்களுக்கு **நேட்ரம் பாஸ்.**

(c) சிறு நீர்ப்பையில் **அடிக்கடி** கற்கல் உண்டாவதை (Graval Stone) த்தடுக்கவும், மட்டிபடுதல் (குழ குழப்பான மண்டி) இவைகளினால் நீர் அடைபட்டு இசிவு வலி ஏற்படின் **கல்கேரியா பாஸ்,** பிறகு **மாக்னீஷியா பாஸ்** கொடுக்கலாம்.

(d) இருமும்போதும், நடக்கும்போதும் தானாகவே மூத்திரம் பெய்தல்; மூத்திரம் கழிந்த பிறகு வெட்டும் வேதனை. மூத்திரம் வருமுன் வலி ஏற்பட்டு, மூத்திரம் வந்து கொண்டிருக்கும்போது வலி குறைந்தும், கழிந்த பிறகு வலி அதிகமாவதும் முக்கியக் குறியாகும் இதற்கு **நேட்ரம் மூர்** கொடுக்கவும்.

(c) ருமாடிஸம், கீழ்வாயு போன்ற வியாதியை உடையவர்களின் நீர் கறுப்பாக இறங்கும். அல்லது செங்கல் தூள், மண் போன்ற வஸ்துக்கள் கலந்தும் வரலாம். **நேட்ரம் சல்ப்** கொடு.

N. B. ஷை நோய் ஏற்படும் சமயங்களில் சுரம் வந்தால் **பெர்ரம் பாஸ்.** உடலில் நீர்சுரப்பு, வீக்கம் உண்டானல் **காலீமூர்** கொடுத்துவரவும்.

## (31) மூத்திரம் குறைதல், அடக்கப் படுதல், தங்காமை. (Scantyurine-Retention of urine - Incontinence of urine)

(a) மூத்திரக் குறைவைப் போக்க ஆரம்பத்தில் பேர்ரம்பாஸ் 6x. பிறகு **காலீபாஸ்** 6x, பிறகு (**கல்கேரியா** ப்ளோர் 6x.—நேட்ரம்சல்ப் 6x) இந்த இரண்டையும் கலந்து



கொடுத்தால் மூத்திரம் தாராளமாக வெளியேறும். பொதுவாக மூத்திரம் **அடக்கப்பட்டு** இரவில் படுக்கையில் தன்னை அறியாமலே போவதற்கு நேட்ரம் மூர். நேட்ரம் சல்ப், மாற்றி, மாற்றிக் கொடு.

(b) மூத்திரம் **அ**திகமாகப் போவதைத் தடுக்க, கல்கேரியா ப்ளோர் 3x. கல்கேரியா பாஸ் 12x. பெர்ரம் பாஸ் 12x, நேட்ரம் மூர் 3x, நேட்ரம் சல்ப் 3x இவைகளை சமன் எடையாகச் சேர்த்துக் கொடுக்கவும். இத்துடன் ஆசிட் பாஸ் 6x ஹோமியோ) மாற்றி, மாற்றிக் கொடுத்தால் நல்ல பலன் கிடைக்கும்.

(c) குடலில் பூச்சிகளினால் இரவில் தானாகவே மூத்திரம் பிரிந்தால், நேட்ரம் பாஸ், கல்கேரியா பாஸ் இரண்டையும் சேர்த்துக் கொடுச்கவும். சீனு 30 வீரியத்தில் இடையே கொடுத்துவரவும்.

N. B. (1) சிலருக்கு சிரித்தாலும், இருமினாலும், நடந்தாலும், **மூத்திரம்** வெளியாவதைத் தடுக்க **நேட்ரம் மூர், காலீபாஸ்** மாற்றி, மாற்றிக் கொடு. மூத்திரம் கழியும்போது வேதனை வலி அதிகமாக இருந்தால் **மெக்னீஷியா பாஸ்.**

(2) **ஆல்பியூமன்** என்ற, நீரில் உப்புச் சத்துக் காணும் நோய்களுக்கு முதலில் **காலீ சல்ப், காலீபாஸ்** மாற்றி மாற்றிக் கொடு. பிறகு அதிகமாகத் தாகம், அதிக மூத்திரம், அதிகப் பசி, அசதியும் உள்ளவர்களுக்கு, **நேட்ரம் மூர், கல்கேரியா பாஸ்** மாற்றி, மாற்றிக் கொடுக்கவும்.

(3) கெர்ப்ப ஸ்திரீகளுக்கு உப்புச்சத்து (Albumin) உண்டானல் காலீமூர் கொடுக்கவும். இத்துடன்

**ஹெலோனியாஸ்** 30 வீரியத்தில் இடையிடையே கொடுத்துவர, பூரணக் குணம் ஏற்படும். (உப்புச் சத்தினால் ஏற்படும் சகல கோளாறுகளையும், காக்கைவலிப்பு, மயக்கம் போன்றவைகளை நீக்குவதுடன் சுகப் பிரஸவமும் ஆகும்.

## (35) மேக வெட்டை (Gonorrhoea)

(a) இறுகிய வெள்ளை நிறம் அல்லது பால்போன்ற நிறத்திலும், மஞ்சள் நிறத்திலும் வெள்ளை சீழ்வடிவதற்கு சிறந்த மருந்து **காலீமூர்.** ஆண் குறியில் வீக்கம் இருந்தாலும், மண்டையில் கரப்பான் கட்டிகளுடன் (குறிப்பாக 2 முதல் 5 வயதுவரை உள்ள பாலகர்களுக்கும்) ஷி வெள்ளை வடிதல் **நோய்க்கு காலீமூர், பெர்ரம் பாஸ்** மாற்றி, மாற்றிக் கொடு.

(b) ரத்தவெட்டை அதாவது சிறு நீருடன் இரத்தம் கலந்து போவதற்கு **காலீபாஸ்.** இரத்தமும், சீழும் கலந்து போகும் வெட்டைக்கு **கல்கேரியா சல்ப்.**

(c) நீடித்த வெள்ளை வெட்டையில் தெளிவான நீர்போன்று (கண்ணாடி நிறத்தில்) வெளியாவதற்கு **நேட்ரம் மூர் 200.** இறுகியும், கெட்டிப் பட்டும் வெளியாகும் நாள்பட்ட வெள்ளைக்கு (உடலில் குளிரும் உணர்ச்சி எப்போதும்) இருப்பவர்களுக்கு **சிலிகா 200** கொடு. நாள்பட்டு இறுகிய பச்சையும் மஞ்சளும் கலந்து வெளியாகும் வெட்டைக்கு **நேட்ரம் சல்ப் 200.**

(d) அரையிடுக்கு நிணநீர் கோணங்களில் கடின வீக்கத்துடன் உண்டாகும் வெள்ளைக்கு **கல்கேரியா ப்ளோர் 6x** பிறகு, **காலீமூர், நேட்ரம் பாஸ்** கொடுக்கவும். (பாலேடை போன்றும், பொன்னிற மஞ்சளாயும் இருந்தால் **நேட்ரம்பாஸ், காலீசல்ப்.**



## (36) வயிற்றுவலி (Colic)

(a) மாதவிடாய் சமயத்தில் ஏற்படும் வலிகளுக்கு **பெர்ரம் பாஸ், மெக்னீஷியா பாஸ்.** குழந்தைகளுக்கு பல் முளைக்கும்போது ஏற்படும் வலிகளுக்கு **மெக்னீஷியா பாசும், கல்கேரியா பாசும்.** ஈயம் வேலை செய்பவர்களுக்கும், வாய் கசப்பு, வலது அடிவயிற்றில் வலி, பித்தக்கோளாறு. நாக்கில் ப்ரவுன் கலரில் மாசு படிந்திருத்தல் போன்ற குறியுடன் வரும் வயிற்றுவலிக்கு **நேட்ரம் சல்ப்.**

(b) புளிப்பு நாற்றமுள்ள மலம், தயிர் கட்டியாக வாந்தி, மலக்கிருமி, வயிற்றில் புளிப்புடன் இருப்பவர்களின் வலிக்கு **நேட்ரம் பாஸ்.**

(c) **கூட்டுமுறை ஔஷதம்:-** மெக்-பாஸ் 6x, நேட்ரம் பாஸ் 6x, நேட்-சல்ப் 6x, காலீமூர் 6x, காலீசல்ப் 6x இவைகளில் சமன் எடை எடுத்துக் கலந்து கொடு. அசதி பலவீனம் இருந்தால் **காலீபாஸ்** சேர்த்துக் கொள்ளவும்.

N. B:- வலியின்போது உடம்பை இரண்டாக முன் பக்கம் வளைத்துக் கொண்டும், சூடான ஒற்றடம், பானங்களினால் சிறிது சமனப்பட்டால் **மெக்னீஷியா பாஸ்** சிறந்த மருந்து.

## (37) வயிற்றோட்டம் (Diarrhoea)

(a) தாகம், சுரம், வாந்தியுடன் வரும் வயிற்றோட்டத்திற்கு **பெர்ரம்** பாசும், மலத்தில் சீதகம், நுரையுடனும், வாய்வுடனும், வெளியாவதும், சிலசமயம் மலச்சிக்கலும்,

வயிற்ருேட்டமும் மாறி, மாறி ஏற்படுவதுமாயிருப்பவர்களுக்கு நேட்ரம் மூர்.

(b) புளித்த வாடையுடனும், பச்சை நிறமாகவும் இருந்தால் நேட்ரம் பாஸ்.

(c) ஆகாரம் ஜீரணமாகாமல், அப்படியே போகும், வயிற்ருேட்டத்திற்கு பெர்ரம் பாசும், கல்-ப்ளோரும் மாற்றி மாற்றிக் கொடு.

(d) வலியுடன் போனல் மெக்-பாசும், வலியில்லாமல் அசதியுடன் போனல் காலீ பாசும்.

## (38) வயிற்றுக், கடுப்பு, சீதபேதி (Dysentery)

(a) ஆரம்பத்தில் பெர்ரம் பாஸ், காலீமூர் மாற்றி, மாற்றிக் கொடு அழுகிய வாடையுள்ள மலம், அடி-வயிறு பருத்து சுத்த ரத்தம் கலந்தும், அழுக்கடைந்த மலம் அல்லது தனி ரத்தப்போக்கு, அடிக்கடி கொள்ளைக்குப் போக வேண்டுமென்ற உணர்ச்சி, உறுப்புத் தள்ளுதல். மலம் பிரிந்தவுடன் கடுப்பும், ஜன்னிசேஷ்டை இவைகள் இருப்பின் காலீபாஸ்.

(b) சீழும், ரத்தமும் கலந்த மலம், பழுப்பும் வெண்மையும் கலந்த மலம் ஜீரணமாகாமல் அதிக அளவில் போவதற்கு காலீமூர், கல்கேரியா சல்ப் வயிற்றில் வலி இருப்பின் மாக்னீஷியா பாஸ் இடையிடையே கொடு.

(c) கூட்டுமுறை ஔஷதம் :- பெர்ரம்பாஸ் 6x, மெக்னீஷியா பாஸ் 6x, காலீபாஸ் 6x, காலீமூர் 6x, இந்த நான்கு மருந்துகளையும் சமன் எடை எடுத்து பவுடராக்கி, சகலவித வயிற்றுக் கடுப்பிற்கும் கொடுக்க



லாம். அண்டி தள்ளிய கேஸ்களுக்கு இக்னேஷியா 6x இடையிடையே கொடு.

## (39) வாந்திபேதி அல்லது காலரு (Cholera)

(a) முதன் முதலில் பெர்ரம்பாஸ் 3x, காலீபாஸ் 3x, மாக்னீஷியா பாஸ் 3x மூன்றையும் கலந்து கொடுக்கவும்.

(b) தசைகளில் முறுக்குதல், வியர்வை சிறிதும் இல்லாமல் இருந்தால் பெர்ரம்பாஸ், காலீசல்ப் மாற்றி, மாற்றிக் கொடு. இசிவு கால்களின் ஆடு தசைகளில் கெண்டையேறுதல் (முறுக்குதல்) இருப்பின் மெக்னீஷியா பாஸ் கொடு. பிறகு கல்கேரியா பாஸ் கொடு.

(c) காலருவை தடுக்க நேட்ரம் சல்ப் கொடு. பிறகு ஷெடி மருந்துகள் கொடுக்கும்போது, சிறுகுடலில் நீர் உற்பத்தியாவதைத் தடுக்க நேட்ரம் சல்ப் கொடு.

(d) வயிற்றில் வலி, வாந்தி, அரிசி கழுவின தண்ணீர் போன்ற மலம், அதிக வியர்வை இக்குறிகளுடன் ஏற்படும் காலருவிற்கு விராட்ரம் ஆல்பம் 30 இடையிடையே கொடுக்கவும்.

(e) தாகம், மூத்திரம் தடைப்படுதல், முனக்கம், பேத்தல் புலப்பம் இக்குறி உடையவர்களுக்கு நேட்ரம் மூர் 30 வீரியத்தில் அடிக்கடி கொடுக்கவும். இத்துடன் பெல்லடோன 3x-ல் மாற்றி, மாற்றிக் கொடுத்தால் நீர் தாராளமாகப் பிரியும்.

## (40) கரப்பான், சிரங்குகள் (Eczema)

(a) நாக்கில் வெண்மைமாசு இருந்தால் காலீமூர், மஞ்சளானமாசு, இருப்பின் காலீசல்ப், ரணமாயும், கனத்தும், வெளுத்தும் தடித்த நாக்கு இருப்பின் நேட்ரம் மூர் வியர்வை புளிச்சவாடையுடனும் நாக்கு அழுக்கடைந்த மஞ்சளாகவும், இருப்பின் நேட்ரம்பாஸ். ஷை சர்ம நோய்களுக்கு, காலீமூர், நேட்ரம் மூர், காலீசல்ப் இம்மூன்றையும், முதல் வாரத்தில் 6x. வீரியத்திலும், 2-ம் வாரத்தில் 30x வீரியத்திலும், 3-ம், 4-ம் வாரங்களில் 200 வீரியத்திலும் மாற்றி, மாற்றிக் கொடுக்கவேண்டும். இடையிடையே கல்கேரியா சல்ப் ஒருடோஸ் 18 நாட்களுக்கு ஒரு தடவை வீதம் கொடுத்தால் இரத்தம் சுத்தமாகும். மிகவும் நீடித்த கேஸ்களுக்கு கிராபைட்டிஸ் 200 வீரியத்தில் மாதம் ஒருமுறை கொடுத்தால் நல்ல பலனைக் காணலாம்.

(b) கடி, படர்தாமரை (Ringworm)

1. நீர் சத்தும், கனத்த சரீரமும் உடையவர்களுக்கு இடுப்பு, கை கால்களில் ஏற்படும் எச்சில் பத்து என்ற ஷை நோய்க்கு நேட்ரம் சல்ப் 200. (மாதம் ஒரு முறையாக 4 தடவைகள்).

2. வறண்டும், மெலிந்த சரீரம் உடையவர்களுக்கு செதில் செதிலாக தோல் உறிந்தும் வறண்டும் இருந்தால் நேட்ரம் மூர் 200.

3. பாதங்களில், தலையில் வியர்வை, அடிக்கடி சர்ம நோய்களினால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருப்பவர்களுக்கு சிலிகா 200.



(c) கக்கூஸ் பத்து என்ற நோயினால் தொடையிடுக்குகளில் சதா வியர்த்தும், புண்ணாகவும், தோல் தடித்து நிறம் கருப்பாக மாறியும் உள்ளவர்களுக்கு நேட்ரம்பாஸ் 6x தினமும் காலை, மாலை கொடுத்து வரவும். அத்துடன் சோரினம் 200 இரண்டு வாரத்திற்கு ஒரு தடவை வீதம் கொடு. சிலருக்கு நேட்ரம் சல்ப் 200-ம் உதவும்.

(d) சர்மத்தில் அரிப்பு அல்லது பித்தத் தடிப்பு (Nettlerash or urticaria)

இந்த வியாதியில் உடலில் எவ்வித சிரங்கும் இல்லாமல் அரிப்பு மட்டிலும் இருக்கும். காரமான உணவுப் பொருள்களை நீக்கியும், எரிச்சலை உண்டாக்கும் சாராயம் போன்றவைகளையும் விலக்கி, நேட்ரம் மூர், காலீமூர் மாற்றி, மாற்றிக் கொடு.

## (41) கல்லீரல் வியாதிகள் :- (Affections of the Liver)

(a) கொழுப்புச்சத்து, பசைபோன்ற ஆகாரங்களினால் கல்லீரலின் வேலைகள் சரியானபடி நடைபெறாமல் நாக்கில் வெண்மை மாசுபடிந்தும், கல்லீரல் பாகத்தில் வலியும், வெளுத்த மலமும் காணப்படின் காலீமூர் 3x.

(b) வாயில் கசப்பு ருசி, மஞ்சள் நிறத்தில் வாந்தி, கண் மஞ்சளாகி, காலை நேரத்தில் வயிற்றுப்போக்கும் கல்லீரல் பாகங்களில் வலி, அசைந்தால் அதிகமாகும். வயிற்றில் இரைதல் போன்ற குறிகளுடன் வரும் மஞ்சட்காமாலைக்கு நேட்ரம் சல்ப். தலைவலியுடன் தாகம், மயக்கம், ஜீரணக் கருவிகளின் வேக்காட்டினால் மூக்கிலிருந்து தண்ணீர் ஒழுக்கும், காணப்படின் நேட்ரம் மூர்.

(c) **கூட்டுமுறை ஒளஷதம்** :- காமாலை நோய்க்கு **காலீமூர்** 6x; **நேட்-மூர்** 6x; **நேட்ரம் சல்ப்** 6x, **பெர்ரம்பாஸ்** 12x (இவைகளை ஒன்ருகச் சேர்த்து அரைத்துக் கொடுக்கவும். அத்துடன் கிழ்வாநல்லிச் சாறும், பசும்பாலும் சமன் அளவாக எடுத்து அதில் **பெர்ரம் பாஸ்** 2x 5 அரிசி எடை வீதம் கலந்து காலை, மாலை கொடுக்கவும். ஆட்டு ஈரல் சூப்செய்து கொடுக்கலாம்.

**பத்தியம்** :- காமாலை நோய்க்கு எண்ணை, நெய் உப்பு-காரம் புளி, பதார்த்தங்களை விலக்கி. ஜீனி வகை மிகக் குறைவாகச் சேர்த்து கஞ்சிபோன்ற ஆகாரங்களைத் தான் கொடுக்கவேண்டும்.

## (42) கண்களின் வியாதிகள் (Eyediseases)

(a) கண் எரிச்சல், பீளை எதுவும் இல்லாமல் கண் சிகப்பு, மணல் போன்ற கட்டிகள் இமைகளில் காணப்படின் பெர்ரம்பாஸ். வெள்ளையான பீளை உற்பத்தியானல் **காலீமூர்**.

(b) கண்களிலிருந்து நீர்வடிதல், கண்களைச் சுற்றிலும் நரம்புவலி, கண் கருப்பு படலத்தில் புள்ளிகள் தோன்றுதல் இருப்பின் **நேட்ரம் மூர்**. கண்களிலிருந்து பொன் மஞ்சள் நிறத்தில் பீளை வருவதுடன் காலையில் கண் இமைகள் ஒட்டிக் கொள்ளுதல் இருப்பின் **நேட்ரம் பாஸ்**.

(c) நீடித்த கண் இறுக்கட்டி, இமைகளில் கட்டிகள், சிரங்குகள், பாதத்தில் வியர்வை இருப்பின் **சிலிகாவும் பெர்ரம் பாசும்** மாற்றி, மாற்றிக் கொடு.



(d) சதா படிக்கும் மாணவர், மாணவிகளுக்கு கண்களை அதிகமாக வேலை செய்ய வைத்ததினுல் ஏற்படும் வலிகள், கண் சிவந்தும், சூடாகவும், எரிச்சலுடனும், தலைவலியுடனும் இருந்தால் ரூடா 6x நாள் ஒன்றுக்கு 3 தடவையும் **மெக்னீஷியா பாஸ்** 3 தடவையும் கொடு.

## (43) காதுகளின் வியாதிகள் (Diseases of the Ears)

(a) காதுவலிக்கு சுரம் இருந்தாலும், இல்லாவிட்டாலும் பெர்ரம்பாஸ். குழந்தைகளின் காதுவலியில் சுரம் இல்லாமல், மஞ்சள் சீழ் வெளியானல் **காலீசல்ப்**.

(b) தண்ணீர் அடைத்த மாதிரியான செவிடு. நீர் போன்ற சீழ்வடிதல். கொய்னுவை சாப்பிட்டதால் காதில் இரைச்சல் போன்ற கெடுதிகளுக்கு **நேட்ரம் மூர்**. காதில் பலவிதமான இரைச்சல் சப்தம் கேட்பதற்கு, **காலீபாஸ்**. முக்கியமாக வயதானவர்களுக்கு நரம்புத் தளர்ச்சியினுல் ஏற்படின் **காலீபாஸ்** சிறந்த மருந்து.

(c) காதுகளிலிருந்து சீழ், இரத்தம் நீடித்து வருவதற்கு **காலீமூர்** 30x ஒரு வாரம் கொடுத்து, மறுவாரம், **சிலிகா** 12x கொடுத்து, கடைசியாக **கல்கேரியா பாஸ்** 12 கொடுத்துவர வேண்டும்.

## (44) கிரந்தி அல்லது பறங்கி நோய் (Syphilis)

(a) முக்கியமான மருந்து காலீமூர். ஆண் குறியின் நுனியிலுள்ள புண்கள் மிருதுவாயும், வெளுத்த ஜவ்வு போன்றும் இருப்பதுடன், அரையிடுக்குகளில் (அரையாப்பு) என்ற கட்டி ஏற்பட்டு புண் உண்டாவதற்கும்

'காலீமூரை' களிம்பாகச் செய்து வெளிப்பிரயோகம் செய்து உள்ளுக்கு 30 வீரியத்தில் கொடு.

(b) ஷி புண் கடினமாக இருந்தால் **கல்கேரியா ப்ளோர்.** ஷி புண் அதிவிரைவாக அழுக ஆரம்பித்தால் **காலீபாஸ்.** ஷி புண்ணில் சீழ்கட்ட ஆரம்பித்தால் கல்கேரியா சல்ப். சீழை உடைக்க **சிலிகா** கொடுத்து பிறகு இதர குறிகளை அனுசரித்து **காலீசல்ப், நேட்ரம் சல்ப்,** நேட்ரம் மூர், போன்ற மருந்துகளும் தேவைப்படும்.

## (45) கிறு கிறுப்பு தலைசுற்றுதல் (Vertigo) Giddiness.

(a) முகம் சிவந்து, தலையில் அதிகமான சூடும் இருந்தால் **பெர்ரம் பாஸ்** 30x. இரத்தச் சோகை உடையவர்களுக்கு **கல்கேரியா பாஸ்** 6x. வயதானவர்களுக்கு எழுந்தாலும், அண்ணாந்து பார்த்தாலும் ஏற்படும் தலைசுற்றுதலுக்கு **காலீபாசும், நக்ஸ்வாமிகா** 30-ம் மாற்றி, மாற்றிக் கொடு. கொழுப்பான ஆகாரக் கோளாறுகளினால் ஏற்படின் முதலில் **காலீமூர்.** பிறகு **பல்சடில்லா** 6x. பித்தக் குறிகளுடன் ஏற்பட்டால் நேட்ரம் சல்ப். கண்களில் நீர் வடிந்தால் நேட்ரம் மூர். புளிப்புக் குறி, பொன் மஞ்சள் நிறமாகபடிந்த நாக்கு, பசியின்மை உடையவர்களுக்கு **நேட்ரம் பாசும்,** நேட்ரம் சல்பும் மாற்றி, மாற்றிக் கொடு.

## (46) கீல்வாயு (Gout)

ரூமாடிஸம் போன்றே ஒவ்வொரு சிறு மூட்டுகளிலும், முக்கியமாக கால்கட்டை விரல் எலும்பின் மூட்டில் வீக்கம், வலி ஆகிய குறிகளுடன் திடீரென்று வேக்காடு



தோன்றும். இரத்தத்தில் யூரிக் ஆசிட் என்ற புளிப்புச் சத்து அதிகமாகச் சேர்ந்துவிட்ட காரணத்தினால் இந்த நோய் ஏற்படுகின்றது. ஷி நோய் ஏற்பட்டு படிப்படியாக வீங்கியுள்ள எலும்பு மூட்டைச் சுற்றிலும் பொறுக்குகள் தோன்றும்.

(a) யூரிக் ஆசிட்டை வெளியேற்ற முதலில் **நேட்ரம் சல்ப்.** சிவந்த வீக்கம் வலியைப் போக்க **பெர்ரம் பாஸ்** கொடு. வலி கடுமையாகும்போது **நேட்ரம் பாஸ், நேட்ரம் சல்ப், மெக்னீஷியா பாஸ்** மாற்றி, மாற்றிக் கொடு.

(b) கூட்டுமுறை ஔஷதம் :-

**காலீமூர்** 3x, **காலீசல்ப்** 3x, **மெக்னீஷியா பாஸ்** 3x, **கல்கேரியா ப்ளோர்** 6x, **நேட்ரம் சல்ப்** 3x, **பெர்பெரீஸ் வல்கெரீஸ்** 3x, **ஆசிட் பார்மிக்** 3x இவைகளைச் சேர்த்து அரைத்துக் கொடுக்கவும்.

N. B: இந்தக் கலப்பு மருந்தை சகலவிதமான வலிகளுக்கும் கொடுக்கலாம்.

## (47) காக்கை வலிப்பு - ஹிஸ்டீரியா (Epilepsy - Hysteria)

(a) வலிப்பு நோய்களுக்கு முக்கிய மருந்து **காலீமூர், நேட்ரம் மூர்.**

(b) குடலில் பூச்சி, புழுக்களினால் ஏற்படுவதற்கு **நேட்ரம் பாஸ்.**

(c) இரவிலும், அம்மாவாசை, பௌர்ணமி தினங்களில் வழக்கமாய் வருவதற்கு **சிலிகா.**

(d) வியர்வை, ஜில்லிப்பு, இருதய படபடப்புடன் முகம் வெளுத்து இருந்தால் **காலீபாஸ், மெக்னீஷியா பாஸ்.**

## (48) சூரிய இடி (Sun Stroke)

முதலில் **நேட்ரம் மூர்** 3x, **காலீபாஸ்** 6x இவ்விரண்டையும் மாற்றி, மாற்றிக் கொடுத்து, பிறகு இடையிடையே **பெர்ரம் பாஸ்** கொடுத்துவரவேண்டும்.

## (49) தலைவலி (Headache)

(a) அடிக்கடி வந்து கொண்டும், (அஸ்பிரின், சாரிடோன் போன்ற மருந்துகளைச் சாப்பிட்டும் வந்தவர்களுக்கு வலியைக் குறைக்க **பெர்ரம் பாஸையும், காலீபாஸ், மெக்னீஷியா பாஸ்** இவைகளை மாற்றி, மாற்றிக் கொடுத்து, பின்னர் **நேட்ரம் மூர்** 30, ஒருவாரமும், **சிலிகா** மறுவாரமும், இவ்விதம் மாற்றி, மாற்றிக் கொடுத்து வந்தால் பூர்ண சுகம் ஏற்படும்.

(b) தலைவலியின் சமயம் (நிர். 46 B)ல் குறிப்பிட்ட கூட்டு ஔஷதத்தைக் கொடுக்கலாம்.

(c) ஜலதோஷம், சுரத்துடன் வரும் தலைவலிக்கு **பெர்ரம் பாஸ்.** மலச்சிக்கல் உடையவர்களுக்கு **நேட்ரம் மூர், காலீமூர்,** பித்தத் தலைவலிக்கு **நேட்ரம் சல்ப்.** நரம்புத் தளர்ச்சி, களைப்பு இருப்பவர்களுக்கு **காலீபாஸ்,** பிறகு **சிலிகா.** இளம் வயதினர்களின், படிப்பவர்களின் தலைவலிக்கு **கல்கேரியா பாஸ்.**



## (50) தொண்டை அடைப்பான் - டிப்தீரியா (Diptheria)

இது குழந்தைகளுக்கு சகஜமாகத் தோன்றும் பயங்கர வியாதி. இவ்வியாதி ஒரு தொத்து நோய் வகையைச் சேர்ந்தது என்றும், ஒருவகைக் கிருமியால் ஏற்படுவதாகவும் சொல்லப்படுகின்றது. ஏக காலத்தில் டான்சில் என்ற தொண்டை நிண நீர்க்கோளங்களிலும், வாயின் மேல் கூறையிலும், உள் நாக்கிலும் தாபிதம் (இரணம்) உண்டாகி வீக்கம் காணும். பிறகு படிப்படியாக அப்பாகங்களில் சிறிது பழுப்புக்கலந்த சதை வளர ஆரம்பித்து முற்றிப்போன கேசுகளில், காற்றுக் குழாய், ஆகாரக் குழாய் நுரையீரல் போன்ற பாகங்களில் சளி (கோழை, சீழ்) அதிகமாகி சுவாசக் குழாய்களை அடைத்து காற்றுப் போகும் துவாரத்தை சிறியதாக்கிவிடும். அப்பொழுது கழுத்துப் பக்கமுள்ள சுரப்பிகளிலும் வீக்கம் காணும், துரிதமான நாடியும், குளிர் சுரம் அடிக்கடி ஏறி இறங்கிக் கொண்டும் இருக்கும். வியாதியஸ்தருக்கு சுவாசத் தடை ஏற்பட்டு மூச்சு முட்டலுடன் இருதயம் நின்று மரணம் சம்பவிக்கும்.

N. B:- டிப்தீரியா வியாதிக்கு முற்றிய நிலைமையில் உடனடியாக ஆப்பரேஷன் (அறுவை சிகிட்சை) தான் செய்யவேண்டும். சாதாரண நிலைமையில் கீழ்க்கண்ட மருந்துகளைக் கொடுத்துக் குணம் காணலாம்.

(a) முதலில் **பெர்ரம் பாஸ்** 30, **காலீமூர்** 30, **காலீ சல்ப்** மாற்றி, மாற்றிக் கொடு. தொண்டைப் பாகங்களில் மஞ்சள் நிறமான மாசு படிந்திருந்தால் **நேட்ரம் பாசும்,** கண், மூக்கு, வாய், இவைகளிலிருந்து நீர்

வடிதல், தண்ணீர் போன்ற வாந்தி, இருப்பின் நேட்ரம் மூர். கடுமையான மயக்கம், சோர்வு, சுரம் ஆகிய ஆபத் சமயங்களில் காலீபாஸ் கொடு.

(b) இரண்டாவது கட்டத்தில் கல்கேரியா ப்ளோர், கல்கேரியா பாஸ், மாற்றிக் கொடு. பச்சை யான வாந்தி, கசப்பு ருசி இருந்தால் நேட்ரம் சல்ப்.

(c) டிப்தீரியா வியாதிக்கு மெர்க்கூரியஸ்சயனைட் 30 (ஹோமியோபதி) மருந்தைக் கொடு. முற்றிய நிலை மையில் டாரெண்டுலா குபென்ஸிஸ் 6 வீரியத்தில் 3 மணி நேரத்திற் கொருமுறை கொடுத்து வரலாம்.

## (51) தொண்டைக் கோளங்கள் வீக்கம் அல்லது டான்சிலிட்டிஸ் (Torsilitis)

(a) முதன்மையான மருந்து காலீமூர். வெண்மை நிறமும் சீழ்பிடித்த குறிகளும் காணப்படின் இத்துடன் கல்கேரியா சல்ப்பையும் மாற்றி, மாற்றிக் கொடு.

(b) ஒரு குறிப்பிட்ட பருவ காலங்களில் தவறாமல் வந்து கொண்டும் அடிக்கடி தோன்றி மறைவதுமாயிருந் தால் சிலிகா.

(c) தொண்டையின் இருபக்கக் கோளங்களிலும் (சுரப்பிகளிலும்) மஞ்சள் நிறப்படல மிருந்தால் நேட்ரம் பாசும், நீர் அடையாளங்களிருந்தால் நேட்ரம் மூரும், நாள் பட்ட கேஸ்களில் வாயைத் திறக்கவும், விழுங்கவும் கஷ்டப்படுபவர்களுக்கு கல்கேரியா பாசும் கொடு.

N. B: (கடுமை குறைந்தவுடன் இவ்வியாதியைப் பூரணமாய்க் குணப்படுத்த கல்கேரியா பாசும், கல்கேரியா ப்ளோரும் 12x வீரியத்தில் மதியம், காலை, மாலை, 5 தினங் கள் வரை கொடுக்கவும்.



## (52) தொண்டைக் கம்மல் (Hoarseness)

(a) சுரக்குறி, தொண்டையில் சுடும் உணர்ச்சி யிருந்தால் பெர்ரம் பாஸ். பாடகர்கள், பிரச்சாரகர்களுக்கு காலீபாசும், பெர்ரம் பாசும்.

(b) இளம் வயதுடையவர்களுக்கு கல்கேரியா பாசும், காலீசல்ப்பும். நாள்பட்ட கேஸ்களுக்கு கல்கேரியா சல்ப் 30x-ம் கொடு.

## (53) தொடை நரம்புவலி, வாதம் (Sciatica)

(a) முதலில் பெர்ரம் பாஸ். தொடையிலிருந்து முழங்கால் வரை வேதனை, நடந்தால் சிறிது சமனம், அமைதியின்மை இருப்பின் காலீபாஸ். இசிவுடன் குடை யம் வேதனை இருப்பின் மெக்னீஷியா பாசும். படுக்கை யில் திரும்புவதினாலும், உட்கார்ந்திருந்து எழுந்திருக்கும் போதும் வலி ஏற்படுமானல் நேட்ரம் சல்ப் கொடு.

(b) ஷை மருந்துகள் கொடுத்துவரும் பொழுது பாசிப்ளோரா இன்கார் நேட்டா q வை 5 துளிகள் வீதம் நாள் ஒன்றுக்கு 3 தடவைகள் கொடுக்கவும்.

## (54) நகச்சுற்றி (Whitlow)

முதலில் பெர்ரம் பாசும், பிறகு சிலிகாவைக் கொடுத்து உடைந்த பின் கல்கேரியா சல்ப் கொடுத்துவரவேண்டும்.

## (55) நீர்க்கோர்வை, ஜலதோஷம், மூக்குச்சளி.

(a) தண்ணீர் போன்ற ஒழுக்கு கண்ணாடி நிறத்தில் சளி மூக்கிலிருந்து வருவதற்கு நேட்ரம் மூர், பெர்ரம்பாஸ் மாற்றி, மாற்றிக் கொடு.

(b) வெள்ளை நிறமான ஒழுக்கு வந்தால் காலீமூர்.

(c) மஞ்சளாக சளி ஏற்பட்டால் காலீசல்ப், நேட்ரம் பாஸ்.

(d) பச்சை நிறமாக சளி வந்தால் நேட்ரம் சல்ப்.

N. B:- நீடித்த ஜலதோஷத்திற்கு கல்கேரியா பாசு 30x, இதை மற்ற ஷ மருந்துகள் கொடுக்கும்பொழுது காலை மாலை கொடுக்கவேண்டும். சளி மிகுந்த நாற்றத்துடன் மூக்கு வறண்டும் துணுக்குகளாக சளிப் பொருள் வெளியானல் சிலிகாவையும், கல்கேரியா ப்ளோரையும் சேர்த்துக் கொடுக்கவேண்டும்.

## (56) நீரழிவு, மதுமேகம், சர்க்கரைவியாதி (Diabetes)

(a) நேட்ரம் சல்ப் சிறந்தது.

(b) சரீரம் இளைத்தல், தாகம், மலச்சிக்கல் உடையவர்களுக்கு நேட்ரம் மூர், பிறகு அர்ஜண்டம் மெட்டாலிகம் 30 கொடுக்கவும்.

(c) புளித்த நாற்றம், அதிமூத்திரம் இருந்தால் நேட்ரம் பாஸ், பிறகு யுரேனியம் நைட்ரிகம் 30 கொடுக்கலாம்.

(d) கூட்டுமுறை ஔஷதம் :

காலீபாஸ், பெர்ரம் பாஸ், கல்கேரியா பாஸ், மெக்னீஷியா பாஸ், நேட்ரம் பாஸ், நேட்ரம் சல்ப் இவைகளை எல்லாம் 6x வீரியத்தில் சம எடை எடுத்து அரைத்து, பிறகு பாஸ்பாரிக் ஆசிட் 30xம், ஸைஸிஜியம் ஜம்போலனம் q கால்டிராம் வீதம் ஷ கலவையுடன் சேர்த்து அரைத்துக் கொண்டு கொடுக்கலாம்.



(e) காலீசல்ப், கல்கேரியா சல்ப், கல்கேரியா ப்ளோர் இம் மூன்றையும் 12x வீரியத்தில் கலந்து கொடுக்கலாம்.

## மாதர்களின் நோய்கள்

## (57) மாதவிடாய் தடைப்படுதல் (Suppression of Menses) or (Amenorrhoea)

(a) இரத்தச் சோகை உடையவர்களுக்கு கல்கேரியா பாசும், நேட்ரம் மூரும்.

(b) நரம்புத் தளர்ச்சி, மன அதிர்ச்சி உடையவர்களுக்கு காலீபாஸ்.

(c) மஞ்சளான நீர் வாந்தி, குமட்டல், வாயு உப்பிசம் இருப்பின் நேட்ரம் சல்ப் (முக்கியமாய் ஈரமைப் புள்ள இடங்களில் வசிப்பவர்களுக்கு சிறந்தது).

(d) புளிப்புவாடை, வியர்வை உடையவர்களுக்கு நேட்ரம் பாஸ்.

(e) பெண்களின் வயது சுமார் 45 முதல் 50-க்குள், மாதவிடாய் நிரந்தரமாக நின்றுவிடும். அப்பொழுது ஏற்படும் கோளாறுகளுக்கு, மெக்னீஷியா பாஸ் 6xம், அக்டியா-ரசிமோசா 30-ல் தினம் 3 தடவைகள் வீதம் கொடு.

## (58) வெள்ளை ஒழுக்கு (Leucorrhoea)

(a) நீர்போன்ற ஒழுக்கு, தலைவலி, இடுப்புவலியுடன் போவதற்கு நேட்ரம் மூர் 200x.

(b) வெண்மையாயும், பிசின்போன்றும் போக்கு ஏற்படின் காலீமூர் 30x.

(c) மாதவிடாய்க்குப் பதிலாக வெள்ளைபடுதல், வயிற்றில் வலி உடலில் ஜில்லென்ற உணர்ச்சி அடிக்கடி ஏற்பட்டு போக்குப் போனால் சிலிகா 12x. **காலீபாஸ்** 6x.

குறிப்பு:— **கல்கேரியா பாஸ்** ஷை மருந்துகளுடன் மாற்றி, மாற்றிக் கொடுக்கலாம்.

## (அதிகரத்தப் போக்குள்ள மாதவிடாய்) (Menorrhagia)

சுகதேகியான பெண்களுக்கு சுமார் 28 நாட்களுக் கொருதரம் கிரமமாய் 5 முதல் 6 அவுன்ஸ் வரை மாத விடாய் வெளிப்படும் அதிக இரத்தப் போக்கு வியாதியில் 28 நாட்களுக்கு முன்னதாகவும் அல்லது 30, 40 நாட்கள் சென்ற பிறகோ ஷை அளவிற்கும் அதிகமாக போக்கு இருக்கும். இந்த வியாதி பல காரணங்களினால் ஏற்படு கின்றது. இவ்விதம் அதிகமாக போக்கு ஏற்படும் சிலருக்கு சூதக ஜன்னி என்ற இழுவை நோயும் வந்து விடுகின்றது.

(a) அமித ரத்தப் போக்கில் கறுப்பு நிறத்துடன் கட்டி கட்டியாய் வெளியேறினால் **காலீமூர்** 30x.

(b) ஷை நோயில் நரம்புத் தளர்ச்சி யுடையவர் களுக்கு சுத்த சிவந்த நிறப்போக்கும். நாற்றமும் இருந்தால் **காலீபாஸ்** 30xம் இத்துடன் இழுவையும் (சூதகச் சன்னி) இருந்தால் **மெக்னீஷியா பாஸ்** 6xம் மாற்றி, மாற்றிக் கொடு.

(c) சோகையுடன் இருப்பவர்களுக்கு போக்கு தண்ணீர் போன்றும், மங்கிய சிவப்பாகவும் போவதுடன் கண்களில் நீர் தழும்புவதும், தலைவலியும் இருந்தால் நேட்ரம் மூர் 30x.



(d) மிகவும் அதிகமாகப் போனால் கெர்ப்பப் பையை சுருங்கும்படிச் செய்வதற்கு **கல்கேரியா ப்ளோரிக்ம் 6x-யும், காலீபாஸ் 6x-யும்** மாற்றி, மாற்றிக் கொடுத்து இடையே **கல்கேரியா பாஸ்** கொடுத்துவரவும்.

(e) **கூட்டு முறை மருந்து:—**

| | | |
|---|---|---|
| காலிபாஸ் 6x | நேட் மூர் 6x | இவைகளை சம அளவு எடுத்து அரைத்துக் கலந்து கொடு |
| காலீமூர் 6x | நேட் சல்ப் 6x | |
| கல். ப்ளோரர் 6x | பெர். பாஸ் 30x | |

(f)

| | |
|---|---|
| மெக். பாஸ் 6x | இவைகளை சம அளவு எடுத்து அரைத்து சுடு தண்ணீரில் கொடுக்கவும் வலியுடன்கூடிய எல்லாவிதமாதவிடாய்கோளாரர் களையும் நிவர்த்திக்கும். |
| காலி. பாஸ் 3x | |
| கல். பாஸ் 3x | |
| பெர். பாஸ் 3x | |
| காலி. சல்ப் 6x | |

## 60. வலியுடன் கூடிய மாதவிடாய் (Dysmenorrhoea)

(a) வலி எடுத்தும், போக்கு போன பிறகு வலி சற்று குறைந்து இருந்தாலும், போக்கு சிறிது கூட இல்லாமல் வலி இருந்தாலும் மெக்னீஷியா பாஸ் 6x சுடு தண்ணீரில் கொடுக்கவும்.

(b) வலி, குமட்டல், வயிற்றில் உப்பிசம், மூக்கி லிருந்து நீர் வடிதல், காலையில் தலைவலி, மலச்சிக்கல், அத் துடன் தண்ணீர் போன்று வெளுத்துப்போகும் போக்கு, மனவருத்தம் உடையவர்களுக்கு நேட்ரம் மூர் கொடு.

(c) உடலில் ஜில்லென்ற உணர்ச்சி, கை, பாதங்களில் வியர்வை, ஒக்காளம் இருப்பவர்களுக்கு **சிலிகா**.

(d) இரத்தச் சோகை உடைய பெண்களுக்கும், பருவமடையும் மங்கையர்களுக்கும் ஏற்படும் மாதவிடாய் குறைந்தும் வலியுடனும் இருந்தால் **கல்கேரியா பாஸ்** முக்

கியமாக ஷெ மருந்துகள் குறிகளுக்குத் தகுந்தாற்போல் கொடுத்து வரும்பொழுது சோகை உள்ள பெண்களுக்கு இதையும் இடையிடையே கொடுக்கவேண்டும்.

**குறிப்பு:—** அதிக இரத்தப் போக்கின் காரணமாயும், சுத்த இரத்தமாயும் வலியுடன், முகம் சிவந்தும் காணப் படும் நபர்களுக்கு சுரம் ஏற்படின் **பெர்ரம்பாஸ்** அடிக்கடி கொடுக்கவும்.

## 61. மசக்கை (Morning Sickness)

(a) கெர்ப்ப ஸ்திரீகளுக்கு **காலையில்** குமட்டலும், **மலச்சிக்கலும்**, உப்புக்கரித்த வாந்தியும் **காணப்படின் நேட்ரம்மூர்** 6x 30x.

(b) **அசதி, ஆயாசம்**, உடையவர்களுக்கு **காலீபாஸ்**

(c) பித்த **வாந்தி** ஏற்படின் **நேட்ரம் சல்ப்** 6x புளித்த **வாந்தி** ஏற்படின் **நேட்ரம்பாஸ்** 6x.

(d) **மசக்கையுடன்** கால்**களில்** கெண்டை ஏறுதலும், **அசதி**யும் இருந்தால் **மெக்னீஷியா பாசும், கல்கேரியா பாசும் மா**ற்றி மாற்றிக் கொடு.

## 62. பிரசவ வலி (Labour Pain)

(a) சிறிதும் வலி எடுக்க**வில்லை** என்ற சமயங்களில் **கல்கேரியா ப்ளோரும், பெர்ரம்பாசும்**, மாற்றி மாற்றிக்கொடு.

(b) சுகப் பிரசவத்திற்க சுமார் 7-ம் மாதம் முதல் **கல்கேரியா ப்ளோர்** 6x வீரியத்தில் காலை, மாலை ஒரு டோஸ் **வீதம் சாப்பிடவும்.**

(c) நரம்புத் **தளர்ச்சி** உடையவர்கள் **அதாவது** அடிக் கடி கர்ப்பச் சிதைவு உற்றவர்கள், அதிகமாகப் பிள்ளை பெற் றவர்கள், எதற்கெடுத்தாலும் பயப்படும் சுபாவம் உடைய வர்கள், பிரசவத்தில் வலி தாங்க முடியாத பெண்கள் இவர் களுக்கு **கரலீ பாஸ்** 6x-ல், முன்னதாகக் கொடுத்து வந்தால் சுகப்பிரசவமாவதுடன் பிரசவித்த பின் ஏற்படும் கோளாறு களையும் வராமல் தடுக்கும்.

(d) **ஹிஸ்டீரியா வியாதி** உடைய பெண்களுக்கு, முக் கியமாக கெர்ப்ப **சமயங்களில் காலீ பாஸ்** அடிக்கடி கொடுக் கவும்.

(e) **கல்கேரியா பாஸ்** 6x **காலிபாஸ்** 6x **கல் ப்ளோர்** 6x. **மெக் பாஸ்** 6x இவைகளை எல்லாம் ஒன்றாகக் கலந்து கொடு.

## 63. பொய்யான பிரசவ வலி (False Pain)

(a) **பெர்ரம்** பாசும், **கல்கேரியா ப்ளோரும்** கொடுத்துக் கொண்டு இடையிடையே **காலோ பில்லம்** 30 வீரியத்தில் ஒரு டோஸ் கொடுத்தால் பலன் ஏற்படும்.

(b) விட்டு விட்டு வலி ஏற்படின் **மெக்னீஷியா பாஸ்** 6x கொடு. **அக்டியாரஸி மோசா** 30-ம் கொடு.

(c) பயந்த சுபாவமுடையவர்களுக்கு **காலீ பாஸ்** கொடு.

## 64. பிரசவ காலத்தில் ஏற்படும் மூத்திர வியாதிகள். (Urine Troubles during Pregnency)

(a) அல்புமென்யூரியா (Albuminuria) என்ற உப்புச் **சத்துக்** கூடியதால் ஏற்படும் **வீக்கத்திற்கு காலிமூர்** 6x-ல் கொடுக்கவும். பிரசவ காலங்களில் ஏற்படும் இசிவு, இழுப்பு களுக்கு **காலிமூர்** பிரதான மருந்தாகும்.

(b) டீ சமயத்தில் ஏற்படும் இழுப்பு வலிகளுக்கு **மெக்னீஷியா பாசும், நேட்ரம் மூரும்** மாற்றி மாற்றிக் கொடு.

## 65. பிரசவ சுரம். (Puerperal Fever)

(a) **பெர்ரம் பாசும், காலிமூரும்** மாற்றி மாற்றிக்கொடு.

(b) சுரம், மனக் கோளாறுகளுடன் இருப்பின் அதாவது (பைத்தியம், சித்தப்பிரமை) **காலி பாசும், மெக்னீஷியா பாசும்** கொடுக்கவும்.

(a) **கூட்டு முறை ஔஷதம்:—**

| | | |
|---|---|---|
| பெர்ரம்பாஸ் | 6x | இவைகளை சமன் எடை வீதம் எடுத்து அரைத்துக் கலந்து கொடுக்கவும். |
| காலிமூர் | 6x | |
| நேட். மூர் | 6x | |
| நேட், சல்ப் | 6x | |
| காலீ சல்ப் | 6x | |

## 66. ஸ்தனங்களின் நோய்கள். (Diseases of the Mammarg Glands)

(a) முதலில் வீக்கம், வலி, இருப்பின் **பெர்ரம் பாசும், காலிமூர்** மாற்றி மாற்றிக் கொடுக்கவும். பிறகு ஸ்தனக் கட்டிகள் கரைவதற்கு **கல்கேரியா ப்ளோரிகம்** 6x-ல் கொடு.

(b) கட்டிகள் சீழ் பிடிக்கும் சமயத்திலும், சீழ் பிடித்த பிறகும் **சிலிகாவைக்** கொடுத்து உடைந்த பிறகு அதை ஆற்றுவதற்கு **கல்கேரியா சல்ப்** கொடு.

## 67. கெர்ப்பச் சிதைவு (Abortion)

(a) பயந்த சுபாவமுடைய சில பெண்களுக்கு 2-வது மாதத்திலோ அல்லது 3-வது மாதத்திலோ, கர்ப்பம் சிதைவு ஏற்படும் குறிகள் தென்பட்டால் முதலில் நக்ஸ்வாமிகா 30



ஒரு டோஸ் கொடுத்து, பிறகு மெக்னீஷியா பாஸ் 6x. காலி பாஸ் 6x. இரண்டையும் கலந்து வெந்நீரில் கொடுக்கவும். இடையிடையே சபீனு 30 கொடுத்தால் சிதைவைத் தடுத்து இரத்த ஒழுக்கையும் நிறுத்தும், கடைசியாக அக்கோனைட் 200 ஒரு டோஸ் கொடு.

(b) பெருவாரியாக இரத்த ஒழுக்கு ஏற்படுவதைத் தடுக்க கீழ்க்கண்ட கூட்டு முறை ஔஷதத்தை கொடுக்கவும்.

| | | |
|---|---|---|
| பெர்ரம் பாஸ் | 6x | சம எடைவீதம் எடுத்து அரைத்து கலந்து வெந்நீரில் கொடுக்கவும். கருப்பாக இரத்தம் போனால் ஹமாமலிஸ் தாய்திராவகமும் தனியே கொடுக்கவும். |
| காலிமூர் | 6x | |
| காலிபாஸ் | 6x | |
| நேரம்மூர் | 6x | |
| கல். ப்ளோர் | 6x | |

## 68. பாலர்களின் வியாதிகள். (Diseases of the Children)

**விளக்கம்:—** பெரியவர்களுக்கு நோய்கள் அடிக்கடி வருவது போலவே சிசுக்களுக்கும். குழந்தைகளுக்கும் வருகின்றது. அதாவது சிசு பிறந்தது முதல் 3 வயது வரை சிசுக்கள் என்றும், 3 வயது முதல் 5 வயது வரை குழந்தைகள் என்றும், 5 வயது முதல் 12 வயது வரை பாலர்கள் என்றும் நாம் அழைக்கின்றோம். ஆனால் இவர்களுக்கு ஏற்படும் நோய்கள் பெரியவர்களுக்கு ஏற்படுவதில்லை. ஏனென்றால் இவர்களுக்கு அங்க அவயவங்கள் சரிவர வளர்ச்சி அடையாத காரணங்களினாலும், போஷாக்கு குறைவினாலுமே, இவர்களுக்கு ஏற்படும் வியாதிகளும் தனிப்பட்டதாகவே இருக்கின்றது. இவர்களின் வியாதிகள் 12 வயது வரையில் தான் தனிப்பட்டதாக இருக்க முடியும், அதன் பிறகு இவர்களின் உறுப்புக்கள் சரிவர வளர்ச்சி அடைந்து வலுவும் ஏற்பட்டு விடுவதால் பெரியவர்களைப் போலவே நோய்களும் உண்டாகி விடுகின்றது.

உதாரணமாக:— கரப்பான், கிரந்தி, கணை, மாந்தம், இளம்பிள்ளை வாதம், வலிப்புகள், தோஷம், கழிச்சல். அதிலும் பல் முளைக்கும் போது ஏற்படும் காய்ச்சல் கழிச்சல், இசிவு, இழுப்பு, ஜன்னி, முதலியவைகளும், காலரு இன்பேண்டம் என்ற வாந்தி பேதியும் முதலில் நோய்கள் குழந்தைகளுக்கு தனிப்பட்ட வியாதிகளாகவே இருக்கின்றது.

**குழந்தைகளின் வியாதிகளை அறியும் விதம்:**—இவர்களின் அழுகைக் குறியிலிருந்து தான் நாம் ஒருவாறு வியாதி இன்னதென்று நிர்ணயிக்க முடியும். (1) அதாவது குழந்தைகளுக்கு பல் முளைக்கும் போது ஏற்படும் கோளாறுகளில் குழந்தைகளின் முகம் கடுகடுத்தும். கோபமாயும், தலை. வயிறு, அதிக சூட்டுடனும் வாயில் எச்சில் வடிந்தும், ஏதேனும் பொருளை அல்லது கை விரலை தன் வாயில் வைத்துக்கடித்துக் கொண்டும். கண்ட பொருளை மிக ஆவலாகக் கேட்டும், கொடுத்தவுடன் கீழே எறிந்துவிடுவதும் ஆகிய குறிகள் நமக்கு சாட்சியளிக்கும். (2) வயிற்றில் வலி உண்டானால் குழந்தை நீண்ட. உரத்த சப்தம் போட்டு அழுதுக் கண்ணீரைப் பெருக்கும். (3) வயிற்று வலி சற்று குறைவதாயின் தன் கால்களை மடக்கி அடி வயிற்றுடன் அணைத்துக் கொள்ளும் அல்லது குப்புறப் படுத்துக்கொண்டும், விட்டு விட்டு அழுதுக்கொண்டுமிருக்கும். (4) நெஞ்சில் வலி அல்லது இதர கோளாறுகள் ஏற்பட்டிருந்தால் குழந்தை அதிகமாக அழாது, கண்ணீர் வடியாது இடையிடையே பெருமூச்சு விட்டுக்கொண்டும், சிறுசிறு இருமல் ஏற்பட்டுக் கொண்டும் இருக்கும். (5) தலையில் வலி, அல்லது மூளை தாபித சுரம் (Meningitis) இவைகளில் மெதுவாய் சிணுங்கிக்கொண்டும், உதடுகளை அசைத்துக்கொண்டும், சில சம



யம் வீல் என்ற சப்தத்துடன் கீச்சிட்டழுவதும், உடனே மௌனமாய் அசைவற்று இருப்பதும் தன் கண்களை மூடிக்கொண்டு சோர்ந்து படுத்திருக்கும் ஆகியக் குறிகள் காணப்படும்.

ஆகவே குழந்தைகளுக்கு ஏற்படும் பற்பல நோய்களுக்கும், பயோ கெமிஸ்ட்ரி மருந்துகளை அதன் குறிகளுக்கு ஒத்திருக்கும்படியான மருந்துகளாகத் தேர்ந்தெடுத்து கொடுப்பதுடன் சில ஹோமியோபதி மருந்துகளையும் கொடுக்கவேண்டியிருக்கும், அத்துடன் சில உப சிகிச்சைகளையும் உடனுக்குடன் செய்யவேண்டும்.

சிகிச்சை:— (1) மூளை சுரம் போன்ற நோய்களில் அசைவற்றும், அசதியுடன், சோர்ந்தும் படுத்திருந்தால் **காலி பாஸ்.**

(2) பல் முளைக்கும்போது ஏற்படும் வயிற்றுப்போக்கு கணை, உடல் மெலிவு இவைகளுக்கு **கல்கேரியா பாஸ்.**

(3) புளித்த வாடையுடன் பச்சை நிற வயிற்றுப் போக்கு வியாதிக்கும், கட்டிகளை வரவிடாமல் தடுப்பதற்கும் **நேட்ரம் பாஸ்**

(4) அடிக்கடி உண்ட உணவே ஜீரணிக்காமல் ஆகாரப்பொருள் கலந்த வயிற்றுப் போக்கு. சுரம். காது வலி இவைகளுக்கு **பெர்ரம் பாஸ்.**

(5) சுரம் இல்லாமல் உண்டாகும் வலிப்பு நோய்களுக்கும், வயிற்று வலி, பற்களை நற நறவென்று கடித்தல் இவைகளுக்கும் **மெக்னீஷியா பாஸ்**, சுரத்துடன் வலிப்பு வந்தால் **பெல்லடோனா.**

(6) ஜில்லிட்ட வியர்வையுடன் மலச்சிக்கல் உண்டாகும்பொழுது **சிலிகா.**

(7) மூக்கிலிருந்து சதா சளி வடிவதற்கு முதலில் நேட்ரம் மூர், காலீமூர், கல்கேரியா பாஸ் இம்மூன்றையும் மாற்றி மாற்றியோ, தனியாகவோ, கலந்தோ கொடுக்கலாம்.

(8) **ஜலதோஷத்திற்கு கூட்டு மருந்து:—**

(a) பெர்ரம் பாஸ் 6x<br>
காலீ சல்ப் 6x<br>
காலீமூர் 6x<br>
நேட்ரம் மூர் 6x<br>
சமன் எடையாக கலந்து கொடு.

(b) சளியானது தண்ணீராகவும், எரிச்சலுடனும் மூக்கில் வடிவதற்கு முதலில் பெர்ரம் பாசும், பிறகு அல்லியம் சீபாவும் மாற்றி, மாற்றிக்கொடு.

(9) **மலச்சிக்கலுக்கு:—** காலீமூர் 6x. நேட். மூர் 6x, கல். ப்ளோர் 6x. சிலிகா 6x இவைகளைக் கலந்து கொடுக்கலாம்.

(10) **குழந்தைகளின் சர்ம வியாதிகளான:—** கொப்புளங்கள், சிரங்கு, இரணங்கள் இவைகளுக்குக் கீழ்க்கண்ட கூட்டு மருந்தைக் கொடுக்கவும். பிறகு ஆகாரங்களைச் சரிப்படுத்தவும்.

காலீ சல்ப் 6x. கல். ப்ளோர் 6x. கல்கேரியா பாஸ் 6z, சிலிகா 6x.

11. **மார்சளி, காய்ச்சல், அனத்தல், கூட்டு ஔஷதம்.** பெர்ரம்பாஸ் 6x, மெக்னீஷியா பாஸ் 6x. காலீ மூர் 6x காலீசல்ப் 6x. நேட்ரம் சல்ப் 6x. இவைகளை சமன் எடையாக எடுத்து அரைத்துக் கலந்து அரை மணிக்கு ஒரு தடவை வீதம் கொடுத்து வரவும். கொள்ளைக்குச் சரியாக போகவில்லையானால் நேட்ரம் பாசை 6 கிரைன்ஸ் எடுத்து வெந்நீரில் கலந்து கொடுக்கவேண்டும்.



